Registered No. M. 1823.　　　உ சிவமயம்.　　　"KUMARAN" Karaikudi.




" என்கடன் பணிசெய்து கிடப்பதே."

( வாரப் பதிப்பு )

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

" ஆலயந் தொழுவது சாலவு நன்று."　　　" திரைகட லோடியுந் திரவியந்தேடு."

ஆரம். உ }　காரைக்குடி, ரக்தாக்ஷிஞூ ஐப்பசிமீ" கூஉ (22-10-24)　{ முத்து கூ

(முன் தொடர்ச்சி.)

# படித்தல்.

கல்வித்துறையில் மலைப்புக்கொள்ளுவோர்க்கு ஒரு நாளும் படிப்பு வரவே வராது. எவன் ஒருவன் ஆயிரம் பிழைகள் விழுந்தாலும் அச்சமின்றி வாசிக் கின்றானோ, அவன் தான் கல்வி யறிவைப் பெறுதல் கூடும். முதலில் ஒரு புத்தகத்தை எடுக்கும் பொழுது நமக்கு ஒன்றுந் தெரியா விட்டாலும், கண்களைக்கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தாலும், அப்புத்தகத்தைத் திருப்பித் திருப்பி வாசிப்போமானல், அதன் பொருள்களை நாம் நன்கு அறிந்துகொள்ளுதல்கூடும். ஒருசெய்யுளை எடுத்துக்கொள்ளுவோம். முதலில் அதன் நடைட்போக்கினை வாசிப்போம். பின்னர் அதன் வெளித் தோற்றங்களை அறிவோம். பிறகு அதன் உள் தோற்றத்தை உணர்வோம். என்ன சுவைகளில் அதில் என்ன சுவை பொதிந் திருக்கின்றது? அணிகள் எவ்வாறு இலங்குகின்றன? என்பதைக் கவனிப்போம்.

*　　　*

பின்னர் நூலாசிரியரது நோக்கம் எவ்வாறுசெல்கின்றதுஎன்பதை இனிதுஅறிவோம். அவ்வாசிரியரது பலதிறப்பட்ட துறைகளிலுள்ள அறிவு எவ்வாறு அழகு செய்கின்ற தென்பதை எண்ணுவோம். பொருளாழமுடைமை கண்டு இனிது புகுந்து குடைந்து குடைந்து,முத்துக்கொழிப்பதுபோற் கொழிப்போம். சொல்லமைதியினைக்கண் டின்புறுவோம். ஒவ்வொரு சொன்மணியையும், மணிவாணிகர் கரங்களில் வைத்து ஒளி காண்பது போல் நாம் நாவின்மிசை வைத்துப் பயின்று மதிப்பறிவோம், மணிகளைக் கடைசற் டட்டடையிற் கொடுத்துப்பட்டை தீர்த்து உண்மை ஒளி காண்பதுபோல், சொற்களைச் சேதப்படுத்தித் தொனிப் பொருள் முதலியன கண்டுகளிப்போம். மணிகளைப் பாடுபட்டுப் பொறுக்கிச் சேர்த்துக்கோத்து அணிகளாக்குவதைப் போல், ஆசிரியர் சொன்மணிகளை எவ்வாறு தேர்ந்தெடுத்துத் தொடுத்திருக்கின்றார் என்பதைச் சோதிப்போம். அப்பாமாலையின் அருமை கண்டு இறுமாப்புக் கொள்வோம். இவ்வாறு ஒருமுறைக்குப் பன்முறையாக ஒரு பாடலைப் பலவகை அறிவுடன் படித்துக் கொண்டே போவோமானல் புதிய புதிய அற்புதமான நுண் பொருள்கள் ஒவ்வொரு முறையிலும் புலப்படும்.

*　　　*

எப்பொழுதும், நன்றாகக் கற்றுத் தேர்ந்த ஆசிரியர்களால் எழுதப்பட்ட இனிய நூல்களையே பயிலுதல் வேண்டும். அவைகளிலே தான் மடுக்க மடுக்கக் குறையாததான இன்பத் தேன் வெள்ளம் பெருகிக்கொண்டிருக்கும்; சொற் சுவை, பொருட் சுவை முதலிய நயங்கள் ததும்பிக் கொண்டிருக்கும். குறுகியஅறிவுடையவர்களால் வரையப்பட்டவெறும் புத்தகங்களைக் கோடிக் கணக்காக வாசித்துக், குவித்தாலும் பயன் ஒன்றுமில்லை. உள்ளீடில்லாத ஈர வெங்காயங்களை ஏராளமாகக் கொணர்ந்து, தோலை உரித்து உரித்து ஒவ்வொன்றாகப் பார்த்தாலும் ஏதேனும் உள்ளீடு புலப்படுமோ? புலப்படாதன்றோ? மேலும் சாதாரண நூல்களை யாராய்தல் கரும்பின் கொழுத்தாடை கறித்தலையே ஒக்கும். ஆகவே, ஆழ்ந்த கருத்துக்களையுடைய அறிவு நூல்களிற் சிலவற்றைப்படித்தாலும் போதும்.

*　　　*

அறிவு நூல்களை வாசிக்கும் பொழுது, அன்டர்கள் அவைகளை வரைந் தருளிய ஆசிரியன்மார் உள்ளக்கருத்தையும் உணர்ந்து கொண்டே செல்லுதல் வேண்டும். ஆங்காங்கு அருமையான இடங்களில் அடையாளங்கள் செய்தல்வேண்டும். மற்ற ஆசிரியர்களின் அரிய நூல்களோடு ஒப்புநோக்குச் செய்தல் வேண்டும். ஆற்றில் ஒடி வரும் நீரை எதிர்த்து நின்று அதன் பலத்தை அறிவது போல, 'இதனை ஏன் அவ்வாறு உரைத்தார்? இவ்வாறு ஏன் உரைத்தல் கூடாது?' என்று எதிர்த்து நின்று உரையாடி உண்மைகாண்டல் வேண்டும். ஆசிரியர் ஒன்றினை உரைக்கும் பொழுதுஎவ்வாறு எடுத்து உரைக்கின்றார் என்பதனை இனிது உற்று நோக்குதல் வேண்டும். கட்டிடத்திலுள்ள வைரக்கல்லைப்பெயர்த்து வெளியே யெடுத்து, அதன்ஒளியினையுணர்வதைப் போல், பாக்களிலுள்ள தொடர் மொழிகளையும் சொற்களையும் வெவ்வேறாகப் பெயர்த்து எடுத்து எடுத்து ஒவ்வொன்றின் உண்மைப் பொருளையும் தெளிதல் வேண்டும் சுருங்கக் கூறின், அறிவு நூலாராய்ச்சி செய்தலைக் கரும்பைப் பிழிந்து சாறெடுத்து உண்டு மகிழ்தற்கு ஒப்பிடலாம்.

*　　　*

நுனிப் புல்லை மேய்வது போல், மேலெழுந்த வாரியாக நூல்களை யாராய்வதனல் எட்டுணையும் பயன் இன்று. இவ்வாறு பயிலுதலாலேயே பலர் கண்களுக்கு நயங்கள் பல்லாயிரம் முறை பயின்றாலும் புலப்படுவதில்லை. ஆழ்ந்து ஆராயாததனலேயே, பலர் தாம் கற்ற பொருள்களையெலாம் மறதி யெனும் மறலிக்கு மனமுவந்து ஈகின்றார்கள். நுண் பொருள்களை நாடுவோரனைவரும், நிறுத்தி மெதுவாகவே நூல்களை ஆராய்தல் வேண்டும். நூலாராய்ச்சி செய்யும் பொழுது நண்டர்கள், வேறொரு நினைவில்லாமல், இரைந்து கூச்சல் இடாமல், ஐந்து பேரறிவுங் கண்களேயாக நூலிலும், ஆசிரியனுடைய உள்ளத்திலும் கருத்தைச் செலுத்தி, நுண்பொருள்களைக் கண்டுணர்ந்து நினைந்து நினைந்து தெளிந்து மாண்பு தெரிந்து மனமகிழ்தல் வேண்டும்.

*　　　*

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

Best copy available.

ஒவ்வொரு முறையிலும் நிறைந்த கருத்துடன் ஒரு சில பக்கங்களையாவது பாடல்களையாவது பயின்றாற் போதும். அவசரக் கோலத்தினை அள்ளித் தெளித்தல் போலின்றி, ஆராய்வதை நுண்ணறிவோடு ஆராய்தல் வெண்டும். இன்றேல், அவசர அவசரமாக அள்ளி உண்ணும் உணவு எவ்வாறு வயிற்றில் சரியாக முழுவதும் சீரணிக்காதோ, அவ்வாறே அவசர ஆராய்ச்சியும் மூளையிற் பதிந்து பயன் விளைவிக்காது. எனவே, நண்பர்கள் நூல்களைக் கற்கும் பொழுது, முதற்கண் கருத்தோடு கற்றல் என்பதனை நினைவில் நிறுவிக் கொள்ளுதல் வேண்டும் அவசர அவசரமாக நாம் ஒரு நண்பருடன் உரையாடுவோமானால், எவ்வாறு அவர் நமக்கு இனிது பதிலிறுக்க முடியாது மயங்குவாரோ, அவ்வாறே நமது அருமை நண்பர்களாகிய புத்தகங்களும் பதிலிறுக்க வியலாது விழித்தல் கூடும். ஆகவே, எப்பொழுதும் ஆழ்ந்த சிந்தையுடன் அவசரப்படாது, சிறிதும் அச்ச மின்றி ஆர்வத்தோடு பயிலுதல் வேண்டும். நமது உண்மை நண்பர்களாகிய புத்தகங்களோடு நாம் ஓர் பொருளைப் பற்றிப்பேசிக்கொண் டிருப்போமானால், அவைகள் அப்பொருள்களை ஒருபொழுதும் வேறொருவர்க்குந் தெரிவித்துக் கலாம் விளைவிக்க மாட்டா. அவைகளோடு நாம் வாயினால் இரைந்து பேசுதல் வேண்டாம். வேறொருவர் அறியா வண்ணம் கண்ணினாற் பேசிக்கருத்தினாலறிந்து களிப்புறலாம். பெரியோர்கள் பெரும் பாடுபட்டு ஆராய்ந்தருளிய விழுமிய பொருள்களையெலாம், மிக எளிதாக நமது நண்பர்களிடமிருந்து பெற்று நாம் எல்லையில் உவகை எய்தலாம். எனவே, அன்பர்கள் ஒவ்வொருவரும் அவசியம் புத்தகங்களின் நட்பைப் பெறுதல் வேண்டும்.

* *

நமது வாழ்நாளில் பொன் போன்ற ஒவ்வொரு நிமிஷத்தையும் வீணாகப் போக்குவதிற் பயனில்லை! இல்லை! சென்ற நிமிஷம் ஒன்றினைத் 'திரும்பி வா, வா' என்று வருந்தி யழைத்தாலும் வாராது. ஆகவே, அன்பர்கள் தங்கள் அருமையான காலத்தினைப் பெருமை சான்ற புண்ணிய நூல்களை ஆராய்வதிற் பயன் படுத்துவார்களாக! ஊர்கடோறும், இல்லங்கடோறும் புத்தக நன் னிலையங்களினைத் தோற்றுவித்துப் பயன் பெறுவார்களாக.

அரு. சோம.

## ஹெட்ஜாஸ் அரசன்.

மகம்மதியருக்கு முக்கிய ஸ்தலமாகிய அராபியாவிலுள்ள ஹெட்ஜாஸ் பிரதேசத்தில் பிரிட்டிஷாரின் ஆதரணையில் அரசு கைக் கொண் டிருந்த ஹுஸேன் அரசர் வாஹாபிய ஜாதியார் படையெடுப்பின் பேரில் தமது பதவியைவிட்டு நீங்கிவிட்டார்.

## இராமநாதபுரம் ஜில்லா கெஜட் சாரம்.

ஒக்கூர் கிராமத்தில் எட்டிலொரு பாகம் பிரித்துக் கானாடுகாத்தான் வி. எ ஆர். அருணாசலம் செட்டியார் பேரா லிருப்பதை ஒக்கூர் சிக. அரு. சித. சிதம்பரம் செட்டியார், சிக. அரு. கரு. கருப்பன் செட்டியார் ஆகிய இருவர் பேராலும் பதிவு செய்யப்பட வேண்டியதற்கு ஒரு விளம்பரம் செய்யப்பட்டிருக்கிறது.

மதகுப்பட்டியில் ஒரு வருஷத்திற்கு முன் பரீட்சார்த்தமாகவைக்கப்பட்டிருக்கும் கால்நடைக்கூடத்தை (பவுண்டு) கலெக்டர் சாஸ்வதமாய் உறுதி செய்திருக்கிறார்.

சிவகங்கை தாலூகாவில் ௩௦ கிராமங்களிலும் திருவாடானை தாலூகாவில் இ கிராமங்களிலும் நில அளவு வேலை நடந்து வருகிறது. ௭ கிராமங்களில் அளவு வேலைகள் முடிவடைந்திருக்கின்றன.

முதுகுளத்தூர் தாலூகாவில் பில்லாண்டி, செந்தவனேந்தல், ஒ. கரிசல்குளம் ஆகிய மூன்று கிராமங்களிலுமிருந்த கள்ளுக்கடைகள் மூடப்பட்டன.

ஜில்லா போர்டு சாலைகளில் ஓடும் மோட்டார் வண்டிகளின் அகலம் ஒரு கால்பலகை நுனியிலிருந்து மறு கால் பலகை நுனி வரையில் ௬ அடிக்கு மேற்படாதிருக்க வேண்டுமெனவும் மீறியிருந்தால் ரூ. ௫௦ அபராதம். விதிக்கப்படுமென்றும் ஓர் உபவிதி செய்யப்பட்டிருக்கிறது.

## தமிழுந் தென்னாடும்.

இத் தலைப்பெயரில் சில புஸ்தகங்களும் பிரசங்கங்களும் நிகழ்ச்சியிலிருந்தும், அவற்றின் அநுபவமான பயன் மிகவும் சுருக்க மென்றே தெரிகின்றது. என்னை? தற்காலம் தமிழ் பேசும் அரசர்களும் ஜமீந்தார்களும் தமிழை மறந்து விட்டார்கள்; நாட்டையும் புதுக்குகின்றார்கள். இந்நிலைகளை இயம்புவது யாருக்கு? கால சக்கரத்தில் வெள்ளி தெசையும், புதனுச்சமும் வருங்கால மெப்போது? தூக்கத்திலிருக்கும் நமது சகோதரர்கள் விழியாதிருந்தால் தமிழின் ஆக்கம் மீக்கூர வழியு முண்டா? எல்லாரும் எப்போதும் பற்று வைத்து ஒரு விடயத்தை முடிக்கலாம். அபிமானம் மறைந்துவிடின் அனைத்தும் பாழாகும். தமிழ் வித்துவ நிலையை நாடிலோ, மிகுமோசமாக இருக்கிறது. தமிழில் தற்கால நிலையை நாடி மடாதிபதிகளும் சமஸ்தானாதிபதிகளும் திருவுள மிரங்கினாலன்றோ நலமுண்டாகும்? 'நாடு நல்ல நாடு, நம்மள் மனுஷாள் தான் கேடு' என்று ஒரு பழமொழியுண்டு. இது பொருத்தமான பழிமொழியாகி விட்டது. சமீபத்தில் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் தமிழுக்கு ஒரு ஆதரவு ஏற்பட்டது. அது முறையில் பாடவிதானத்தில் தங்கி விட்டது. புலவர்களைத் தக்கவாறு பரீட்சித்துப் பரிசில் வழங்கு முறையைக் காணோம். தமிழ்க்கலையோ, இலக்கணம், இலக்கியம், தருக்கம், நியாயம், வாக்கியத்தொடை செய்யுளியற்றல், வியாசம் வரைதல் என்று பல துறைகளாகி விளங்கும். தமிழில் பல நூல்கள் வடமொழி நூல்களை அநுசரித்தும், வடமொழி நூல்கள் சில தென்மொழியைத் தழுவியும் இருக்கும். புஸ்தகங்களின் பெயரை வரிசைப் படுத்தி எழுதிவிட்டால் அவ்வப் பாஷைகள் உயர் நிலை யடையவே மாட்டா! இவ்வாறு செய்தால் தமிழ் வடமொழிகள் பயின்றோர் வளரவும் மாட்டார். ஆகவே, தமிழபிமானிகாள்! தமிழைத் தக்கவாறே ஒவ்வொருதுறையிலும் வளர்க்க முன் வாருங்கள். சமஸ்தானத்திலுள்ள உத்தியோகஸ்தர்களே! தமிழ்க்கடலில் ஒவ்வொரு துறையிலும் சிறிது சிறிதாகப் பெற்ற நீர்த்துளிகளினளவு நோக்கிப் பரிசிலும் பட்டமும் நல்கி அறிஞர்களை ஆதரிக்க முன் வாருங்கள். சில சபைகளில் பரீட்சிக்கும் ஆசிரியப் பெரும் புலிகளுக்கே விடை நன்கு போதாவிட்டால் என்செயலாம்! தமிழ்த்தாயே! நின் திருநோக்கஞ் செய்தால் தமிழ்ப் புலவர்கள் இந்திரனையும் வருணனையும் அக்கினியையும் வென்று சீருடன் வாழ்வார்கள். தமிழைத் தக்க முறையில் வளர்க்கவும் கற்றோரைத் தக்க வாறே ஆதரிக்கவும் தென்னாட்டார் முயற்சிக்க வேண்டுமென்பதே இக்கடிதர் வேண்டு கோளாகும்.

ஒரு தமிழ்த் தொண்டன்.

## சர்வதேசத் தபால் மகாநாடு

சர்வதேசத் தபால் மகாநாடு சென்ற ஜுலை ஆகஸ்டு மாதங்களில் ஸ்வீடன் தேசத்தின் தலைநகராகிய ஸ்டாகஹோமில் நடைபெற்றது. அந்த மகாநாட்டுக்கு இந்தியாவின் பிரதி நிதியாக தபால் தந்தியிலாகாவின் அத்தியக்ஷராகிய மிஸ்டர் ஜி. ஆர். கிளார்க் என்பார் சென்றிருந்தனர். அந்த மகாநாட்டில் இந்தியாவைக் கேவலம் ஒரு சார்பு நாடென்றும் ஆனதால் இதற்குத் தனியாக வாக்குக் கொடுக்கும் சுதந்தரம் கிடையாதென்றும் கூறப்பட்டதாம். மிஸ்டர் கிளார்க் அதனை மறுத்து ஏனைய சுவாதீன நாடுகளுடன் இந்தியாவும் ஒப்பந்தம் செய்யத்தக்க பாத்தியமுண்டென்று மற்றவர்கள் யாவரும் ஒப்புக்கொள்ளும்படி செய்து விட்டதாகச் சிம்லாவிலிருந்து ஒரு சமாசாரம் வருகிறது.

### பிரிட்டிஷ் அரசாங்க மாறுதல்.

லண்டனில் 'ஒர்க்கர்ஸ் வீக்லி' என்னும் சமத்துவக்கட்சிப் பத்திரிகை இராணுவத்தாருக்குத் துர்ப்போதனை செய்ததாக அப்பத்திராசிரியர் மீது வழ்க்குத் தொடரப்பட்டு அவ்வழக்கு நடைபெறாமலே வாபீஸ் வாங்கப்பட்டது. இதன்மேல் குறுகிய (கன்ஸர்வேடிவ்) கட்சியாரும் தொழிற்கட்சி அரசாங்கத்தைக்கண்டித்துத் தீர்மானங்கள் கொண்டுவந்தனர். அத்தீர்மானம் நிறைவேறித் தொழிற்கட்சி அரசாங்கம் தோல்வியுற்றது. உடனே பார்லிமெண்டைக் கலைத்துவிடும்படி முதன் மந்திரி அரசபிரானுக்குக் கூற அவ்வாறே பார்லிமெண்டு கலைக்கப்பட்டு விட்டது. இனித் தேர்தல் வருகிற புதன் கிழமை நடக்கும். தொழிற்கட்சி அதிகாரப்பதவிலிருந்தது ஒன்பது மாதங்களேயாம்.



## கதைப் பகுதி

### கூழை ரங்கன்.

(முன் தொடர்ச்சி.)

இவ்வளவு தான் நடந்தது. ஒரு பெரும்பள்ளத்தில் இரண்டு நேயர்கள் கிடந்ததைத் தோற்றுப்போன வண்டிக்காரர்கள் கண்டார்கள். கொஞ்ச தூரத்தில் ரங்கநாதன் செட்டியாருடைய வண்டி உருளையொன்று தனியாக ஓடிக்கொண்டிருந்தது. வண்டியை ஒரு சக்கரத்தோடு மாடுகள் இழுத்துக்கொண்டு ஓடின. பிச்சை ராவுத்தர் போன விடந் தெரியவில்லை. பள்ளத்தில் கிடந்த இருவரில் ராமனுக்குக் காயம் அதிக மில்லை. ரங்கநாதன் செட்டியாருடைய முழங்கால் புரண்டு போய் விட்டது. மெதுவாகத் தூக்கினார்கள். தோற்றுப் போன ஒருவருடைய வண்டியிலேயே போட்டு வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள். முடமெடுத்து வைத்துக் கட்டப்பட் டிருக்கிறது.

அத்தியாயம் ௮.

செட்டியார் சிவபதமடைந்தார்.

ரங்கநாதன் செய்த அடம் பொறுக்க முடியவில்லை. மெய்யம்மை ஆச்சியின் சம்பம் மகனிடத்தில் பலிக்க வில்லை. ஆகவே தன் கணவனுக்கு ஒரு கடிதம் எழுதினாள். அதில் பிள்ளையாண்டான் நிலைமை மேற்போய் விட்டதென்றும், தாமதித்தால் வீடுவாசல் இருப்பதும் போய் விடுமென்றும், உடனே புறப்பட்டு வரவேண்டு மென்றும் எழுதப்பட்டன. உள்ளபடியே சோணாசலச் செட்டியார் சென்று வருஷம் மூன்றாகி விட்டது. மேலும் உடம்புக்கு முடியாமல் அடிக்கடி கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். இந்தக் கடிதங் கண்டதும் அவருக்கு வருத்தம் மேலிட்டு விட்டது. எப்போதுமே ரங்கனிடத்தில் நம்பிக்கை கிடையாது. மிக வருந்தினார். பக்கத்திலிருந்தவர்களிடம் யோசனைகேட்டார். போதிய வயது வாவில்லை யாதலால் வீடு வாசல்களை ஒன்றுஞ்செய்ய முடியாது என்று முடிவு கட்டினார்கள். ஆகவே பதிலாள் வந்தவுடன் புறப்படுவ தென்று தீர்மானித்துவிட்டார். அப்படியே பதிலும் எழுதினார். ரங்கநாதனுக்கும் கடிதமெழுதி அதில், வீட்டுக் காரியங்களை ஒழுங்காகப் பார்த்து வரும்படியும், குடும்பத்தில் ஒற்றுமையாக விருக்கும்படியும், நல்லவர்களுடன் நேசம் வைத்துக் கொள்ளும்படியும் தெரிவித்திருந்தார். ரங்கநாதனுக்குக்காயம் மிகப் பெரிதாதலால் கால் ஊன்றுதற்கே மாத மிரண்டாகிவிட்டது. ஆட்கள் வருவதும் சற்று குறைவாகவே யிருந்தது. இந்தக் காலத்தில் ரங்கநாதன் சரித்திரத்தில் ஒன்றும் விசேஷம் நிகழ வில்லை. மூன்று மாதங்கள்சென்றன. சோணாசலச் செட்டியாரும் மிகுந்த வியாதியோடுவந்துசேர்ந்தார். வந்து நுழைந்தவுடன் மெய்யம்மையாச்சி சென்று, 'ஐயோ, அப்பா' வென்று அழுதாள். வேண்டியவரை சமாதானஞ் சொல்லிச் சோணாசலச் செட்டியார் சமாதானப்படுத்தினார். ரங்கநாதர் சிறிது அடங்கி விட்டார். ராமன் அந்தப் பக்கத்தில் தலைகாட்டுவதில்லை. அம்பலகாரர் மட்டும் ஏகதேசத்தில் வருவார். சோணாசலச் செட்டியார் அதிகமான காலத்தை வெளி நாடுகளிலேயே தள்ளிவந்தவராதலாலும் அகட விகட சாமர்த்திய மில்லாத படியாலும் அம்பலகாரர் முதலியோர் சிநேகத்தைப் பெற்றிருக்கவில்லை. என்றாலும் செல்வராஜபுரத்தில் களவு முதலியன நடை பெற்றால் மங்கலப்பட்டி அம்பலகாரரை அழைத்து வந்து விசாரணை நடத்துவது வழக்கம். அந்தக்காலங்களில் நமது சோணாசலச் செட்டியாரும் உடனிருப்பார். இவர் நல்ல மனிதனென்பதனாலும், பணக்கார ரென்பதனாலும் அதிக மதிப்பிருந்தது. அம்பலகாரரும் மதிப்பாகவே எண்ணியிருந்தார். ரங்கன் அம்பலகாரருடன் நேசமாயிருப்பதில் மட்டும் சோணாசலச் செட்டியாருக்குச் சந்தோஷமாக விருந்ததன்றி மற்ற விஷயங்கள் எதுவும் பிடிக்கவில்லை. பிச்சை ராவுத்தனைச் சோணாசலச் செட்டியார் நீக்கி விட்டு வேறொரு ஆள்சேர்த்து விட்டார். ஒரு மாதம் சென்றது. நிலைமை முழுமையும் தெரிந்து கொண்டார். இரும்புப் பெட்டியிலிருந்த இருபத்தையாயிரம் ரூபா நகையும் அங்கில்லை. ரங்கநாதனைக் கேட்டதற்கு ஒன்றும் பதிலில்லை. எங்கும் ஒன்றுக்குப்பத்தாக எழுதிக் கொடுத்து வேறே வாங்கியிருப்பதாகவும் தெரிந்தது. புடவைக் கடை, பலசரக்குக்கடை, முதலிய கடைகாரர்கள் ஆயிரக்கணக்காகப்பாக்கி யெழுதிக் கொண்டுவந்து கேட்டார்கள். இவைகளைப்பார்த்துங் கேட்டும் சோணாசலச் செட்டியாரின் மனம் புண்பட்டு வெறுத்துப் போய்விட்டது. இந்தக் கவலையும் சேரவே நோய் வரவர வலுத்தது. மேல மாகாணம் ராமன் செட்டியாருக்கு ஆள் அனுப்பி வரவழைத்தார். பெண்ணின் விஷயத்தைக் கேட்டு மிக வருந்தினார். இனிப் பிழைக்கமாட்டோமென்பதை நன்கு தெரிந்து கொண்ட சோணாசலச்செட்டியார் தமது பணத்தில் ஒரு லட்சம் ரூபாவைக் கோவில் கட்டுவதற்காகவென்று சில பெரிய மனிதர்களின் பொறுப்பில் கொடுத்து விட்டார். மெய்யம்மையாச்சிபேரால் இருபத்தையாயிரம் ரூபாவும் சீதைபேரால் இருபத்தையாயிரம்ரூபாவும் துண்டுபண்ணி விட்டார். சீதையின் பொருட்டுக் கொடுத்த தொகையை மேலமாகாணம் ராமநாதன் செட்டியார் வைத்துக் கொள்வதென்றும் சீதைக்குப் பிள்ளை பிறந்தால் அந்தப் பிள்ளைக்கும், இல்லா விட்டால் ஏதாவது தருமத்துக்கும்,கொடுக்கும்படி சொல்லிவிட்டார். ரங்கநாதனைக் கூப்பிட்டுக்கடன்எவ்வளவு வாங்கியிருக்கிறாய் என்று கேட்டார். கணக்கு எழுதிவைக்கவில்லை யாதலால் தெரியாதென்று சொன்னான். விசாரித்துப் பாக்கியுள்ளவர்கட்குப் பூராத்தொகையும் பார்த்து சுமார் இருபதாயிர ரூபா கொடுத்தார். இப்படியாக இரண்டு லட்சம் போக இன்னும் மூன்று லட்சம் ரூபா விருக்கிறது. இப்படியே நோய் வாய்ப்பட்டுக் கிடந்து சில மாதங்களில் சோணாசலச் செட்டியார் சிவபதமடைந்தார். யாரையாவது மகனுக்குக் கார்டியனாக நியமித்து விடவேண்டுமென்று வெகு பாடு பட்டும் பயன்பட வில்லை. ஒருவரும் உடன்படமாட்டோ மென்று சொல்லி விட்டார்கள்.

சோணாசலச் செட்டியார் இறந்தவுடனே ராமனும் வந்து சேர்ந்தான். பசுத்தானம் செய்ய வேண்டு மென்று பஞ்சாங்கக்கார சுப்பண்ணாவுக்கு ஆளனுப்பினார்கள். இரவு பதினொருமணியிருக்கலாம். சுப்பண்ணா எழுந்து வெகு வேகமாக வந்து சேர்ந்தார். வரும் போதே ஏகோதிட்டம் நாராயணய்யர் படுத்திருந்த விடத்தைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து சேர்ந்தார். பசுமாட்டைப் பிடித்து ஏகோதிட்டம் நாராயணய்யர் கையில் கொடுத்தார்கள். பசுமாடுமட்டும் நாராயணய்யருக்கெ

ன்பதும், கூடக்கொடுத்த தக்ஷிணை ரூபா நூறு பஞ்சாங்கக்காரருக் கென்பதும் ராமனுக்கு மட்டுந்தான் தெரியும். பஞ்சாங்கக்காரர் புறப்பட்டுப் போய்விட்டார். சொந்தக்காரருக்கு ஓலைகள் எழுதப்பட்டன. அம்பலகாரருக்கும் ஓலை யெழுதப்பட்டது. காலை ஆறரை மணிக்கு கொம்பு பறை முதலிய எத்தனங்களுடன் சுமார் முன்னூறு பறையர்கள் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களைக்கண்டு அந்த ஊர் ஜனங்கள் மெய்மறந்து போயினர். உள்ளபடி யாகவே சின்ன ஊர்களில் ஒருவர் இறந்து போனல் யாவரும் அந்த வீட்டில் தான் இருப்பார்கள். அதிலும் பணக்காரர், நல்ல மனிதனானவர் இறந்துபோனல் கேட்க வேண்டுமா? அதோடு முந்நூறு பேர் ஏககாலத்தில் கொம்பு தப்படித்துக்கொண்டு வரும்போது பாக்கியிருக்குமா? எல்லா ஜாதி ஜனங்களுந் திரண்டு நின்றூர்கள். இந்த முந்நூறு பறையர்கட்குப் பின்னர் நூறு பேர்கள் வந்தார்கள். அவர்களின் நடுவே நமது கறுப்பணனம்பலம் வந்து கொண்டிருந்தார். 'மங்கலம்பட்டி அம்பலகாரர் வருகிறூர்' என்ற செய்தி யெங்கும் பரவி அடுத்த ஊர்கட்கும் சென்றது. அம்பலகாரர் யாவரும் ரங்கனுதன் செட்டியாருடைய வீட்டினுள்ளே சென்று துக்கம் விசாரித்தார்கள். "மேலே ஆகவேண்டியவற்றைத் தாமதியாமல்செய்யுங்கள்! வேறுஎன்னதேவை?" என்று கிஷ்கிந்தாபுரியை அம்பலகாரர் கேட்டார்.

"சாமான்கள் முதலியவற்றை ஒரு நிமிஷத்தில் தயார் செய்து விடுவோம். அதற்கொன்றும் நேரஞ் செல்லாது. அந்தப் பிள்ளை சீதையைக்கூட்டிவர சிபார்சு ஆள் போயிருக்கிறது. வரவேண்டியது தான்" என்று ராமன் பதில்கொடுத்தான். சிறிதுநேரத்தில் மேலமாகாணம் ராமனுதன் செட்டியார் அவர் மனைவி, மன்னைகட்டிக் கறுப்பன்செட்டியார், அவர் மனைவி, சீதை, பிள்ளை குட்டிகள் யாவரும் வந்து சேர்ந்தார்கள்.

அந்தப் பக்கத்தில் மிகக் கைதேர்ந்தவரும் நமது ராமனுக்கும் அம்பலகாரருக்கும் நன்கு தெரிந்தவருமான ராமண்ணவையருக்குக் காலையிலே ஆளனுப்பியிருந்தபடியால் அப்பொழுதுதான் அவரும் வந்தார். வேண்டிய சாமான்கட்கு ஆளனுப்பி வரவழைத்தார்கள். ராமண்ணுதான் அன்றைய வேலைகள் யாவும் பார்த்தார். சாமண்ணு பலே ஆசாமி! எந்தக் காரியத்தையும் சாதிக்கக் கூடிய சாமர்த்தியம் அவருக்குண்டு. எப்படியாவது ரங்கனுதனுடையநேசத்தைப் பெறவேண்டுமென்று காத்திருந்தார். ராமனும் அம்பலகாரரும் நினைத்தால் அது முடியுமென்று அவர்களை வேண்டிக்கொண்டே யிருந்தார். இப்பொழுது சந்தர்ப்பம் வாய்த்து விட்டது! இந்த நாட்டிலுள்ள பல வூர்களிலுமிருந்து பெரிய மனிதர்கள் யாவரும் வந்து சேர்ந்தார்கள். அங்கு வந்திருந்த கூட்டத்தை அந்த ஊர் தாங்க முடியவில்லை. சமையல் செய்வதற்குப் பேர் பெற்ற பிராமணாட்களை ராமண்ணு திட்டம் செய்திருந்தார். எல்லாக் காரியங்களும் முடிந்து பகல் போஜனம் ஒன்றரை மணிக்கு நடந்தது. வந்திருந்தவர்கள் யாவரும் இப்படிச் சாப்பாடும் விசாரணையும் எவராலும் செய்ய முடியாதென்று பேசிக் கொண்டார்கள். இச்சொற்கள் ரங்கனையும் அவன் தாயாரையும் சந்தோஷக் கடலுள் அமிழ்த்தி விட்டன. ராமனும் ராமண்ணவும் அம்பலகாரருந்தான் இவற்றிற்குக் காரணர்களாதலால் இம்மூவரிடத்திலும் அளவிலாத பிரியம் ரங்கனுக்கு உண்டாகி விட்டது. அன்று பகல் பறையர்களுள்பட சாப்பிட்டவரின் தொகை ஆயிரத்து நானூற்று எழுபத்தாறு என்று ராமன் கணக்கெடுத்தான். மாலையில் "வேண்டிய வற்றுக்குத் தெரிவியுங்கள்" என்று சொல்லி விட்டு அம்பலகாரர் போய் விட்டார். இப்போது ராமனும் ராமண்ணவும் ரங்கனுக்குப் பக்கத்தி லிருக்கிறூர்கள். இரண்டு மூன்று நாட்கள் சென்ற பிறகு ஒரு நாள் பஞ்சாங்கம் சுப்பண்ணு வந்திருந்தார். "சபிண்டிகரணத்திற்கு வேண்டிய காரியங்களைக் கவனிக்க வேண்டு மல்லவா?" என்று கேட்டார். சடாரென்று, "ஆமாம், ராமண்ணவையும் கலந்து பட்டியல் போடவேண்டியது தான்" என்று கிஷ்கிந்தாபுரி சொன்னன். இந்த வார்த்தை நமது சுப்பண்ணு தலையில் கல்லைத் தூக்கிப் போட்டாற்போ லிருந்தது. சுப்பண்ணு பேராசை பிடித்தவர். எவ்வளவு கிடைத்தாலும் திருப்தி கிடையாது. இன்னொருவனுக்கு அரைக்காசு கூடக் கொடுக்கச்சம்மதிக்க மாட்டார். எல்லா வீடுகளிலும் ஏக போகமாகக் கொள்ளையடிப்பது வழக்கம். ஒவ்வொரு தானத்திற்கும் வேறு வேறு ஆள் வைக்க வேண்டுமென்பதற்காகத் தான் எவனையாவது உட்கார வைத்து அவனுக்கு கால் அரை கொடுத்து விட்டு பாக்கியை அடித்து வருவது வழக்கம். எல்லாவற்றிற்கும் ஒருவர் இருந்து வாங்கலாமென்றால் தாமே உட்கார்ந்து வாங்கத் தயாராக விருந்தார். இந்த மாதிரியாகத் தானத்தை வாங்கிக் கமிஷனை யெடுத்துக் கொண்டு பாக்கியைத் தம் வீட்டிற் கொண்டு வந்து தரும்படியாகப் பல ஆட்களை அவர் தயார் செய்து வைத்திருந்தார். அந்த ஆசாமிகட்கும் வேறு போக்கிடம் கிடையாமையால் நமது சுப்பண்ணுவைச்சுற்றி வாயைப் பிளந்துகொண்டு நிற்பார்கள். இப்பொழுது சுப்பண்ணு சம்பம் பலிக்க வில்லை. ராமண்ணுவுக்கும் பஞ்சாங்கக்காரருக்கும் கொஞ்சங்கூடப் பிடிக்காது. ராமண்ணு தானம் வாங்குவ தில்லையென்றாலும் சுப்பண்ணுவுக்கு ஒன்றுங் கிடைக்கவிட மாட்டாரென்பதை சுப்பண்ணு நன்றாக உணர்ந்திருந்தார். ரங்கனின் முகத்தையே பஞ்சாங்கக் காரருடைய கண்கள் பரிதாபக் குறியுடன் பார்த்துக் கொண்டிருந்தன. "அது சரிதான், அப்படியே நாளை மாலையில் வேண்டியவற்றைச் செய்வோம்" என்று ரங்கனுதர் பதில் சொன்னர். பஞ்சாங்கக்காரர் இடது கையைத் தூக்கிய வண்ணமாக ரங்கனுதனைப் பார்த்து, 'நல்லது' என்று சொல்லி விட்டு வீடு சேர்ந்தார்.

ராமண்ணு மிகக் கெட்டிக்காரன்! ஆனல் அயோக்கியன்! அவனுக்கு இப்போது வயது முப்பத்தொன்று. கலியாணம் இன்னும் ஆக வில்லை. வேண்டிய தில்லையென்று தீர்மானித்து விட்டான். தாயார் தகப்பனர் யாவரும் இறந்துபோய் விட்டார்கள். இவனுடைய தமையனொருவ னிருந்தான். அவன் பரம சாது. அவனும் பத்து வருஷங்கட்கு முன்னர் இறந்து போய் விட்டான். தமையன் மனைவிதான் இவனுக்குச் சாதம் பொங்கிப் போடுகிறூள். இவன் ரங்கனுக்குப்போய்வந்தபடியாலும், பலருடைய சிநேகிதத்தைப் பெற்று மற்ற பிராமணர்கட்குக் கேடு செய்கிறபடியாலும் அந்தச் சாதியார் இவன் குடும்பத்தைத் தள்ளிவைத்து விட்டார்கள். ராமண்ணுவும் ராமனும் வெகு நெருக்கம்! அத்தியந்த விசுவாசமாகப்பழகியிருந்தார்கள்.

(தொடரும்.)



# பர்மாவில் அத்தின்களின் (சங்கங்களின்) மீது அடக்குமுறை.

——[ ]——

## தாராவாடியில் கவர்னரின் பேச்சு.

பர்மாவில் ஆள்வரி மறுப்பு இயக்கத்தை அரசாங்கத்தார் பல வழிகளிலும் நசுக்கி வருகின்றனர். சென்ற புரட்டாசி ௩௦-தேதி புதனன்று மாலை பர்மாவின் கவர்னரவர்கள் தாராவாடியில் இது சம்பந்தமாய்ப் பேசிய பேச்சின் சாராம்சம் வருமாறு :—

"... ... ... எனது அரசாங்கத்துக்கு ஒரு விஷயம் நிச்சயமாய்த் தெரியும். அதாவது, விதிக்கப்பட்ட வரி கொடுக்க வியலாமையினலாவது அல்லது மிதமிஞ்சியதென்றாவது வரி மறுக்கப்படவில்லை என்பதாம். விவாகமானவருக்கு ஐந்து ரூபாவும் விவாகமாகாத வருக்கு இரண்டரை ரூபாவும் பெரும்பாலான ஜனங்களுக்குக் கடுமையான வரியென்று உண்மையில் கூறவியலாது. ஏனெனில் பலர்விஷயத்தில் ஒரு வருஷம் முழுவதும் அவர்கள் கொடுக்க வேண்டிய வரி இது ஒன்றே யாகும். ஆனல் அதுவும் தாங்கமுடியாத பளுவாயிருப்பின், எவரேனும் இறுக்கச் சக்தியற்றிருப்பின், அவர் கொடுக்கக் கடமைப்பட்டிருக்க வில்லை. எவருக்காவது வரி கொடுப்பது கஷ்டமாக விருந்தால் வரிப்பணத்தைச் சேகரிப்பதற்கு அவருக்குத் தாராளமாய்க் கெடுக் கொடுக்கப்படும். இவ்வருடம் அரசாங்கத்தார்அளவுக்குமீறிக் கடுமை காட்டுகிறூர்கள் என்று சொல்வது முழுப் பொய்யாகும். செப்டம்பர௴ முடிவில் கீழ் பர்மா முழுவதிலும் வசூலாகாமற் பாக்கி நிற்கும் வரியின் மொத்தம் சுமார் ௩௦ லட்சம் ரூபாவாகிறதென்றும் சென்ற வருடத்தில் அதே தேதியில் நின்றபாக்கி ௨௧ லட்சமென்றும் நான் அறிந்து கொண்டிருக்கிறேன். அதாவது, சென்ற வருடத்தைவிட இவ்வருடம் ௯ லட்சம் ரூபாதான் வசூல் பண்ணுவது அதிக கஷ்டமாக விருக்கிறது. இந்தக் கணக்குகளால் வரி வசூலிப்பதில் மிதமிஞ்சிய கடுமை காட்டப்படுகிறதென்று சொல்வதும் தப்பென்று தெரிகின்றது. உண்மையிலே, வரி கொடாமைக்காகக் கைது செய்யப்பட்டவர்களில் பலரிடத்தில் வரியை விட அதிகமான ரொக்கப் பணம் இருந்திருக்கிறது. உண்மை யாதெனில், மூடர்களும் கெட்ட எண்ணமுடையோரும் வரி மறுத்ததற்காக அவர்களுக்கு யாதும் நேராதென்றும் அரசாங்கத்தார் சுயராஜ்யம் கொடுத்து விடுவார்களென்றும் கிராமவாசிகளுக்குப் போதித்து வர முயற்சிக்கின்றனர். பர்மாவின் எளிய ஜனங்களுக்குப் பாதுகாப்பும் க்ஷேமமும் சுதந்தரமும் சுயஆட்சிக்குச் சாதனமும் அளித்திருக்கிற ஒரு அரசாங்க முறையை அவர்கள் வெகு சீக்கிரத்தில் கவிழ்த்து விட விரும்புகின்றனர். கிராமங்களில் உண்டாஞு அத்தின்கள் ஏற்பட்டிருப்பது அரசாங்கத்துக்கு விரோதமாக ஜனங்களைத் தூண்டி விடுவதற்கன்றி வேறு எந்த நோக்கத்தையும் கொண்டன்று. சுயராஜ்யம் பெறுவதே தங்கள் நோக்கமென்று அவைகள் சொல்லிக் கொள்ளுகின்றன. ஆனல் அவைகள் வேலை செய்ய இறங்கியிருக்கும் துறையில் செல்லும்படி விடப்பட்டால், நாட்டில் காபந்தும் க்ஷேமமும் சுதந்தரமும் அழிந்து போய் அராஜகம் நிலைத்துவிடும். அவைகள் தங்கள் நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டுப் பயமுறுத்தலையும் கட்டுப்பாடான நிர்ப்பந்தத்தையும்கையாளப்பின்வாங்கவில்லை. இந்தஅத்தின்கள்வேலைசெய்யுமிடங்களில் எந்த மனிதனும்தன் அபிப்பிராயத்தை வெளியிடவாவது தனக்குச்சரியென்றுதோற்றுகிறபடி நடக்கவாவது முடியவில்லை. அவன் தைரியவானு யிருந்து அத்தின்களை எதிர்த்து நிற்பானுனல், அவனது ஆடுமாடுகள் வெட்டப் படுகின்றன, பயிர்கள் அழிக்கப் படுகின்றன, வீட்டில் கல்லெறியப் படுகிறது, அவனது நெற் பயிரை நடுவதற்கு உதவி கிடைக்காது, அவனுக்கு வேலைகிடைக்காது; அவன் குடும்பத்தில் மரணம் நேர்ந்தால், அவன் ஜாதி வழக்கமும் மத சம்பிரதாயமும் விதித்தவாறு கிரியைகளை ஆற்ற முடியவில்லை. பல சந்தர்ப்பங்களில் பௌத்த குருமாரும் அல்லது பௌத்த குரு வர்க்கத்தைச் சேர்ந்தவரென்று சொல்லிக் கொள்வோரும் இந்த அத்தின்களின் கொடுமைகளை எதிர்த்து நிற்போரை அடக்குவதில் சேர்ந்து கொண்டிருக்கின்றனரென்று கூற வருந்துகிறேன். இது சர்வ மதங்களுக்கும் எதிரானது. குருமார்களிலும் சாமான்ய மனிதர்களிலும் நல்லோர்களால் இவ்விதமே கருதப் படுகின்றது. அத்தின்களும் சுயேச்சையாய் நடக்கவில்லை. அவைகள் ஒரு மத்திய ஸ்தாபனத்தினுல் ஆட்டப் படுகின்றன. இம்மத்திய ஸ்தாபனமாவது தனது பிரசாரத்தினுல் இன்னது நேருமென்று கவனிக்காமலும் தான்கைக் கொண்டிருக்கும் நடை முறைகளின் தீங்கை யுணராமலும் ஒன்றுமறியாத மனிதர்களுக்கு ஏற்கனவே பெருத்த கஷ்டத்தை யுண்டுபண்ணியிருக்கிறது. இவ்வித இயக்கத்தினிடத்து அரசாங்கத்தாரின் கடமை இன்ன தென்பது வெளிப்படை. இந்த இயக்கத்தை அரசாங்கத்தார் தங்கள் சக்தி முழுவதும் கொண்டு அடக்க வேண்டியதே. சட்டத்துக் கட்டுப் பட்டு நடக்கும் பிரஜைகளை இந்த அத்தின்களின் கொடுமையினின்றும் பாதுகாக்க அரசாங்கத்தார் முழு மனதுடன் தீர்மானித்து விட்டனர். என்ன நேரிடினும் சட்டத்தையும் ஒழுங்கையும் காக்க நாங்கள் தீர்மானித்து விட்டோம் ... ... "

### சட்ட விரோதமான சங்கங்கள்.

புரோம் ஜில்லாவில் (௧) யுவா பகுதியில் கலயான வேயா வித்தியா அத்தின், (௨) புரோம் நகரில் ஒய். எம். பி. எ, (௩) வட நாவினில் கலயான யுவஅத்தின், (௪) மத்திய நாவினில் திட்ஸ காயி அத்தின் (௫) தெற்கு நாவினில் யாதனு யேத்கிதா அத்தின், (௬) பர்மிய சங்கங்களின் புரோம் ஜில்லா சபை, (௭) புரோம் நகர சபை.

தாராவாடி ஜில்லாவில் (௧) லேப்படான் மேல்பகுதி நகரம் சுவேலாங்கில் தாமா ரெக்கிதா அத்தின், (௨) அலங்கோனில் தாமா பொன்னியா கூத்தலா அத்தின் (௩). தாமா சந்தா விவுத்தா அத்தின் (௪) கிழக்கு கயாத்தாகினில் கூத்தல தாமா சந்தா அத்தின், (௫) மேற்கு கயத்தாகினில் கூத்தல தாமா சந்தா அத்தின் (௬) தயேகான் தலானில் தாமா சேக்தா அத்தின், யுவாமா (௭) தயேகானில் பொன்னியாதன்யே அத்தின், (௮) பேமிந்தானில் பொன்னியாதன்மே அத்தின், (௯) சக்குவினில் ஒய். எம். பி. எ., (௧௦) கிழக்கு லேப்படான்வேத்லகேவில்தாமபாலா, (௧௧) திடயூங்பினில் லாகா பாலதாமா சதி அத்தின், (௧௨) மோஞ்ஞோ நகரத்தில் ஜிங்கோவில் தாமா போட்கியுவா (௧௩) மடகோன் மயூக்பேட்டையில் தனவிதோ அதி, (௧௪) டுகிபேட்டையில் பொன்னியா காரியா, (௧௫) கபாகோனில் தாமதனு, (௧௬) டட்டில் புதத்தனு யேட்கிதா சபத், (௧௭) மியாகிகோனில் புதயூஸனு, (௧௮) குங்கியான்ஸாவில் புதபாதா, (௧௯) கைங்கியில்புதத்தாத்தனு, (௨௦) பியூகிக்வினில் திலவிதோஅதி, (௨௧) தீண்டாவில் தாதனுஹிதா, (௨௨) யேதபியாவில் தாமவிந்தனு, (௨௩) கயாட்கியாவில் தமா யேட்கிதா, (௨௪) ஜாபிந்தாவில் தாதநா யெட்கிதா, (௨௫) பின்னு காட்டில் தமாயேட்கிதா, (௨௬) சிட்கோன் குந்தயில்தமா யோட்கிதா, (௨௭) மோங்யோவில் தாதநா யேட்கிதா.

## இரங்கூன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்.

இவ்வாண்டு புரட்டாதித் திங்கள் நாள் இருபதில்௩மணிக்கு திரு. அ. ப. சொ. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் தலைமையில்திருவாளர்களான சொ சுப்பிரமணியச் செட்டியார், சா. கணேசன் செட்டியார், சுப, இலக்குமணச் செட்டியார், செ. இராமசாமி செட்டியார், பு. இராமநாதன் செட்டியார் கமாயுட் ரா. முருகேச முதலியார் ஆகிய இவர்களால் முறையே, தேவாலயம், தேவாலய தரிசனம், பொறுமை, சூது, சைவ சமய பரிபாலனம், இளைஞர் அபிவிர்த்தி என்னும் விஷயங்கள் உபந்யசிக்கப் பட்ட பின்னர் தலைவரவர்கள் முடிவுரையோடு மாலை ௭ மணிக்கு நிறை வெய்தியது. மறுதினம் சரஸ்வதி பூஜையை முன்னிட்டு இளைஞர்களால் கீதம் முதலியன இன்னிசைக் கருவிகளுடன் பாடப் பெற்றது. சிற்றுண்டிகள் வழங்கப் பெற்றன.

சரு. கணேசன், காரியதரிசி.

Bleed through

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போது மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.

—அருணகிரி நாதர்.

குமரன், காரைக்குடி.
ரக்தாக்ஷி௵ ஐப்பசிமீ கூ௨.

## வழியில்லையோ?

தருமஞ் செய்வதில் தலை சிறந்தவரெனக் கொண்டாடப்படுகிற நமது சமூக நிலை இன்றைப்படி யிருக்கிறதென்பதை யெண்ணுகிற எவருக்கும் வருத்தமே மேலிடுகின்றது. வயதுவந்த வாலிபர் எண்ணற்றோர்கல்யாணநோக்கிக்கவலையுறுகின்றனர். கல்யாணத்திற் குரிய வயதுவந்த பிறகும் கணவனிடம் ஒப்புவிக்கப்பெறாத கன்னிமாருங்கணக்கற்றிருக்கின்றனர். செல்வர்கள் தங்களுடைய டாம்பீக வாழ்வையும், பண வரும்படியையும், கௌரவத்தையுங் கருதியலைந்துகொண்டிருக்கின்றனர். பெண்ணினைப் பெற்று வைத்திருப்போர் எங்கு அதிகப் பணங் கிடைக்கிற தென்று துப்பு வைத்து விசாரித் தலைகின்றனர். மண மகனின் நிலை எப்படி யிருப்பினும் தனக்குக் காசினி நோட்டுக்கட்டும் பெண்ணுக்கு வைர நகையும் போடுபவனுக்கு மணமுடிக்க விழைந்து நிற்கின்றனர். வாலிபர்களோ ஒரு செயலுமின்றி இருபது முப்ப தாயிரம் ரூபா முடிப்புகளைக் கையில் வைத்துக்கொண்டு வாளாகாலங்கழித்து வருகின்றனர். இஷ்ட மில்லாத நாயகனுக்கு வாழ்க்கைப்படுமாறு வற்புறுத்தப் பட்டுக் கண்ணீர் வடித்துக் கொண்டே காலங்கழித்துவரும் பெண்களும் பலராகப்பெருகி வருகின்றனர். ஆண்குழந்தைகளைப்பெற்று வைத்திருக்கிற சாதாரண குடும்பத்திலுள்ள தாய்தந்தையரின்நிலைபார்க்குந்தரத்ததாயிருக்கவில்லை. இரவும் பகலும் இதேகவலையினாலுடலும் மனமுமிளைத்துக் கனவினும் நனவினும் கல்யாணக்கவலைகொண்டுகஷ்ட முறுகின்றனர். இஃதொருபுற மிருக்க, பங்காளிகள்தோது படுத்துகிற பாடு சகிக்க முடியவில்லை. எத்தனை பேர் எவ்வளவு துன்ப முற்றபோதினும் பங்காளிகள் உதவி புரிவதென்பது மறந்தே போய்விட்டது. ஒருவன் துன்பமுற்றால் அதைக்கண்டு அளவிலா மகிழ்ச்சி கொள்ளுகிற உடன்பங்காளிகளும் நிறைந்து வருகின்றனர். பணக்காரராகவுள்ளவர் மற்றவரின் நலங்கருதி அடக்கி விசேஷங்களை நடத்துவோமென்ற எண்ணத்தைக்கொள்ள வில்லை. அவர்கள் இஷ்டம்போற் செய்யட்டும் என்று ஏழைகளாயிருப்பவர் இலகுவாக வாழவும் முடியவில்லை. பணம் அதிகமாகவிருப்பவர் குறைவாகவிருப்பவர் என்ற வித்தியாசமின்றிப் போட்டி போட்டுக்கொண்டு குடும்ப சம்பந்தமான விசேஷங்களை நடத்தவேண்டி யிருக்கிறது. இல்லாவிட்டால் நான்று கொண்டு உயிரைவிடும்படியான அவமானத்திற்கு உட்படவேண்டி நேருகிறது. இத்தனை துன்பகரமான வாழ்வில் இறக்கவும் வழிதெரியாமல் இருக்கவும் வழிதெரியாமல் நமது ஜனங்கள் படும்பாடு சொல்லுந்தரத்திலில்லை. ஏழை எப்பொழுதும் பணக்காரருடன் போட்டி போட முடியாது. பணக்காரர் ஏழைகளின் நிலையைப்பற்றிச் சிந்தியாது மனம் போனபடி வாரி வழங்கிச் செலவிட்டால் அதனைப் பார்த்துக் கொண்டு ஏழைகளாக உள்ளவர் இருக்க வேண்டியதுதான். அவ்வாறின்றிப் போட்டி போட்டுச் செலவிட முற்பட்டால் அநேகதியாகி வாழ்விழந்து போகவேண்டியதாக முடிந்து விடுமன்றோ? இதனை எத்தனை பேர் எண்ணிப் பார்க்கின்றனர்? பங்காளிவீட்டுத் தோதென்பதில் இருவரும் ஒரு மாதிரியாகவே கருதப் படுகின்றனர். ஆனால் செலவு விஷயத்தில் ஒரு மாதிரியாகச் செலவு செய்த பின்னர் படும்பாடு கொஞ்சமல்ல. இதனைப் பார்த்துப் பார்த்துக்கஷ்டத்தை யடைந்த பின்னரும் அந்தத் துன்பமான வாழ்க்கையைச்சீர்ப்படுத்திக்கொள்ள முயல்கிறார்க ளில்லையே? இவற்றை நீக்க வழி யில்லையோ?

---

## எண்டிசைக் காட்சி.

### தனவைசிய ஊழியன்.

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்று வெளிவந்துகொண் டிருந்த "தனவைசிய ஊழியன்" பத்திரிகையையும், ஷை அச்சுயந்திர சாலையையும் திருவாளர் ராய. சொக்கலிங்க செட்டியாரவர்கட்கு விற்று விட்டனர். சங்கத்தின் சார்பிலேயே வைத்துப் பொறுப்பேற்று நடத்துதற்கு ஆளில்லாதபடியால் விற்கவேண்டியது அவசியமாய்விட்டது. ஓராண்டுக்கு முன்னர் ஷை பத்திரிகையை ஷை யாருக்கேனும் விற்றுவிடுதெல்நலமென்றுகூறப்பட்டபோது சவன அக்காலத்திற் புறக்கணிக்கப்பட்டதாயினும், இப்பொழுது அந்த முடிவுக்கே தான் வந்து சேரவேண்டியதாய் விட்டதென்பது கவனிக்கத் தக்கதாகும். ஆனால் அக்காலத்தில் வேலையின் நோக்கம் ஒன்றாக விருந்தது. இது போழ்து சங்கத்தில் தொண்ணூற்றுநூறார்க் கூட்டம் கூட்டவேண்டுமென்றொரு தீர்மானம்செய்யப் பட்டிருக்கிறது. இந்நிலையில்அத்தீர்மானத்தில் நம்பிக்கைகொள்ளாத ஒருவரிடம் பத்திரிகை விற்கப்பட்டது சிறப்புடையதாகுமென்றெண்ண இடமில்லை. ஆயினும், அன்பர் சொக்கலிங்க செட்டியாரவர்கள் தொண்ணூற்றுநூறார்க் கூட்டுகிற விஷயத்தில் எதிரிடையாக எழுதமாட்டார்களென்று நிச்சயமாக நம்ப இடமிருப்பதைக் கொண்டு நாம் திருப்தியுறுகிறோம்.

### வைக்கம் வீரர்.

உயர்ந்த நோக்கும் சிறந்த குணமும் உண்மைத் தேசாபிமானமுமுடைய வைக்கம் வீரர் ஸ்ரீமான். ஈ. வி. ராமசாமி நாயக்கரவர்கள் சென்னையிற் செய்த ஒரு



பிரசங்கம் காரணமாக கஉச ஏ. பிரிவின்படி சென்னை அரசாங்கத்தாரால் கைது செய்யப் பெற்றார். வழக்கம்போல் வாக்கு மூலம் கொடுக்கப்பட்டது. இவ்வழக்கில் அரசாங்கத்தார் தமது வழக்கத்தைக் கையாளாமல் ஸ்ரீமாந் நாயக்கரவர்களை விடுதலை செய்து விட்டார்கள். அதற்கொரு நொண்டிக்காரணமுங் கூறப்படுகிறது. ஹிம்சை வழியில் சுயராஜ்யம் பெறவேண்டு மென்று தாங்கூறவில்லை யென்றும், அரசாங்கத்தின் மீது துவேஷமாதல் வெறுப்பாதல் உண்டாக்குவது தமது விருப்ப மில்லை யென்றும் கூறுவதால் வழக்கை நிறுத்திக்கொண்டார்களாம். என்னே! அஹிம்சை வழியில் தான் தேசாபிமானிகள், முக்கியமாக காந்தியடியார்கள். சுயராஜ்யத்தை விரும்புகின்றன ரென்பதை உலகறியும். காரண மெதைச் சொன்னாலும் ராஜதந்திர முறை சிறிது மாற்றமடைகிறதென்பதையே ஸ்ரீமாந் நாயக்கரின் வழக்கு அறிவுறுத்துகிறது.

### சரியான தீர்மானம்.

ஆந்திர மாகாண மகாநாட்டில் பலதீர்மானங்கள் செய்யப்பட் டிருக்கின்றன. அவற்றுள் நூல் சந்தாவைப்பற்றிய தீர்மானமு மொன்றாகும். காங்கிரஸ் அங்கத்தினர் நான்கணாவாவது அல்லது மாதம் ஒரு கஜம் நூலாவது சந்தாவாகச் செலுத்தவேண்டுமென்றும், காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் இருவித சந்தாவும் செலுத்த வேண்டு மென்றும் தீர்மானங் கொண்டு வரப்பட்டு நிறைவேறி விட்டது. ஆனால் சிலர் தீர்மானத்திற்கு விரோதமாகத் திருத்தங்கள் கொண்டு வந்தனர். தேசாபிமான சிம்மமாகிய ஆந்திரரத்தின கோபால கிருஷ்ணய்யா இத்தீர்மானத்தை இப்போது நிறுத்தி வைக்கவேண்டுமென்று கொண்டு வந்த பிரேரணையும் ஏற்றுக் கொள்ளப்படாது போய் விட்டது. இதனால் ஆந்திர நாட்டில் கதர் இயக்கம் பலப்பட்டு வருகிற தென்பது நன்கு விளங்குகிறது. அங்கும் சில ஆசாமிகளிருந்து கதரியக்கத்தை யெதிர்க்கிறார்களென்பது பரிதாபப் படத்தக்கதாகும்.

### அத்தின்களும் பர்மா கவர்னரும்.

பர்மாவிலுள்ள புரோம், தாராவாடி யென்ற இரண்டு ஜில்லாக்களில் சிலதேசீய சங்கங்கள் தோன்றிப் பலமான ஹிம்சை முயற்சிகளைச் செய்துவருகின்றனவென்ற செய்திகள் சென்றவாரம் வெளியானவற்றிலிருந்து தெரியவருகின்றன. இப்பொழுது பர்மா கவர்னர் தாராவாடியில் செய்த பிரசங்கம் மற்றொரு பக்கத்தில் வெளியாகி யிருக்கின்றது. தலைவரி வேதபடுத்தியதன் காரணமாகஎழுந்த இவ்விவக்கம்நம்மவரிடத்தில்வட்டிக்குக்கடன் வாங்கிய தொகையைத் திருப்பிக் கொடுப்பதில்லை யென்பதில் ஊக்கங் காட்டி நிற்கிற தென்றறிய வருந்துகிறோம். இப்பகுதியில் நாட்டுக் கோட்டையார் கடனுக்க் கொடுத்திருக்கிற தொகை ஏழுபது லட்சமாகு மென்று அத்தின் காரியதரிசி கூறியிருப்பது கவனிக்கத் தக்கதாகும்.

### பிரஞ்சு மந்திரியும் கதரும்.

கவர்ண்மெண்ட் வக்கீலான ஸ்ரீமாந் பி. பி. சாஸ்திரி என்பவர் தம்மால் ராட்டினத்தில் நூற்கப் பெற்ற ௩௨ம் நம்பர் நூலில் நெசவு செய்த ஒரு கதர் ஆடையை வெம்பிளி ஏகாதிபத்தியப் பொருட் காட்சிக்கு அனுப்பியிருந்தார். அங்கு விஜயஞ் செய்த பிரஞ்சு தேசத்து முதன் மந்திரியான மிஸ்டர் ஹெரியாட் இந்தப் புண்ணியக் கதராடையைக்கண்டு வியப்புற்று அதனைத் தாம் உபயோகிக்க வேண்டு மென்று பெரு விருப்பங்கொண்டு பன்முறையும் அதிகாரிகளைக் கேட்டாராம். ஆனால் சாஸ்திரியார் விற்கக்கூடாதென்றும் திருப்பி அனுப்பிவிட வேண்டுமென்றும் எழுதியிருந்ததால் ஷை மந்திரியாருக்குக் கொடுக்க முடியவில்லை. ஸ்ரீமாந் சாஸ்திரியாருக்குப் பொருட்காட்சி சாலை அதிகாரிகள் எழுதியுள்ள கடிதத்தில் "தமக்குக் கிடைக்கவில்லை யென்று பிரஞ்சு மந்திரியார் மிக வருந்தினார்" என்று குறிப்பிட்டிருக்கிறார்களாம். கதரின் மகிமை இன்னும் போகப் போகத் தெரியும்.

### தமிழ் மாகாண மகாநாடு.

நமதுதமிழ்நாட்டு மகாநாடு அக்டோபர் கஅ, ககூ தேதிகளில் திருவண்ணாமலையில் கூடுமென்றும் அவ்வமயம் ஸ்ரீமாந் ஜம்னாலால் பஜாஜ் தலைமை வகிப்பா ரென்றும் செய்திகள் பரப்பப் பெற்றன. பின்னர் விஷயங்கள் ஒன்றும் வெளி வரவில்லை. மகாநாடு நடை பெறுகிறதா இல்லையா என்ற விஷயம் ஒருவருக்குந் தெரியாதிருந்தது போலும். செவ்வாய்க் கிழமை வெளியான சுதேசமித்திரனில் மகாநாடு குறித்த தேதிகளில் நடைபெற ஏற்பாடுகள் நடை பெறுகின்றனவென்றும், பிரதி நிதிகள் ஏராளமாக வர ஏற்பாடுகள் செய்யவேண்டு மென்றும் அறிக்கைகள் பிறந்திருக்கின்றனவென்று எழுதப்பட் டிருக்கிறது. மித்திரன் இவ்வாறு தெரிவித்த பிறகு எத்தனை பேர் மகாநாட்டுக்கு வரக் கூடுமென்பதை நினைக்கும்போது சிரிப்புவருகிறது. இவ்வளவு சுறுசுறுப்பாக நடை பெறுவதை யெண்ணிச் சந்தேகித்து மகாநாடு நடைபெறுகிறதா வென்று தந்திகொடுக்க இல்லை யென்றுபதில் வந்தது. தமிழ்நாட்டுத் தலைவர்களும்,உபசரணைக்கமிட்டியாரும் சிறிது விழித்தெழுந்து வேலை செய்வார்களாக. இப்போது ஸ்ரீமாந் ஈ. வி. இராமசாமி நாயக்கரைத் தலைவராக மகாண காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டியார் தெரிந்தெடுத்திருப்பதாகச் செய்தி எட்டிகிறது.

## தந்திச் செய்தி.

பினாங்கு, ஐப்பசி சஉ.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | [illegible] |
| ஈயம் விலை | [illegible] |
| ரப்பர் விலை | எஎ |

(த. வை. [illegible])

இரங்கூன், ஐப்பசி [illegible]

| | |
|---|---|
| பெரிய ஆலை அரிசி | இகO |
| சின்ன ஆலை அரிசி | இசஙி |
| படகு நெல் | உஉஙி |
| ரயில் நெல் | உஉO |
| ஏ. முதல் தரம் குறுநொய் | சகO |
| ஷை இரண்டாந்தரம் | சகO |
| பி. முதல் தரம் குறுநொய் | சஎஙி |
| ஷை இரண்டாந்தரம் | சசஙி |
| நசியன் | இசO |
| மில்சேர் | கூசO |
| கடலை | ககO |
| பாசிப்பயறு | கூசO |
| தட்டைப்பயறு | கூOO |
| சிகப்பு பீன்ஸ் | ககO—ககஙி |
| வெள்ளை பீன்ஸ் | கஅO—கஅஙி |
| பொற்காசு (பவுன்) | கஙி—க—O |

(காரியதரிசி ராம. மே. சித. அருணசலம் செட்டியாரிட மிருந்து)

இரங்கூன் ஐப்பசி, சஉ

பர்மா நாட்டுக்கோட்டைச்செட்டியார் சங்கத்தின் காரிய நிர்வாக சபை சென்ற ஞாயிறன்று கூடிற்று. அநேகமாய் எல்லா அங்கத்தினரும் விஜயம் செய்திருந்தனர். சங்கத் தலைவராகிய ஸ்ரீமாந் சா அ ராம சாமிநாதன் செட்டியாரவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள். கடந்த கூட்டத்தின் நடவடிக்கைகள் வாசிக்கப் பட்ட பிறகு சென்ற மாதத்தின் வரவு செலவு கணக்குகளைக் காரியதரிசியார் வாசிக்க அக்கணக்குகள் யாவராலும் ஏகமனதாய் அங்கீகரிக்கப் பெற்றன.

---

## உள்ளூர்.

பரிசளிப்பு விழா:—நாளை அக்டோபர்மீ உசஉ வெள்ளிக்கிழமை மாலை இ-மணிக்கு ஸ்ரீமீனாட்சி சுந்தரேசுவர ஹைஸ்கூல் மாணவர்களுக்குப் பரிசளிப்பு விழா வித்தியாசாலைக் கட்டடத்தில் நடைபெறும். அப்பொழுது கல்வி இலாகாத் தலைவர் ஆர். லிட்டில் ஹேல்ஸ், எம். ஏ., அவர்கள் அக்கிராசனம் வகிக்க ஸ்ரீமதி லிட்டில் ஹேல்ஸ் அம்மையார் பரிசுகளை அன்புடன் அளிப்பார்கள்.

சைவமகா சபை:—புரட்டாசி மீ உகஉ யன்று மாலை ஙமணிக்கு இவ்வூர் அறுபத்து மூவர் குருபூஜை மடத்தில் அநுகூல விநாயகருக்கு விசேஷ பூஜை செய்து வேதாரண்யம் ஸ்ரீமத்



சோமாஸ்கந்தபட்டார்கரவர்களால் 'சைவம்' என்னும் விஷயமும், யாழ்ப்பாணம், சிவக்கொழுந்தய்யா அவர்களால் 'பக்தி' என்னும் விஷயமும், ராம. மெ. ஞானசம்பந்தச் செட்டியாரவர்களால் கலியனாயனார் சரித்திரமும் ஸ்ரீமான் கா. கா. அள. காளையப்ப செட்டியாரவர்களால் 'சைவ ஒழுக்கம்' என்னும் விஷயமும் உபந்நியசிக்கப் பெற்று ஷெ செட்டியாரவர்களால் வந்தனோபசாரமுங் கூறப்பெற்று இரவு கூ-மணிக்குச் சபை இனிது நிறைவெய்தியது.

தபால் வசதி:—திருச்சினாப்பள்ளிக்கும் இவ்வூருக்கும் இடையில் தபால்களைச் சுமந்து ஓடிக்கொண்டிருந்த மோட்டார் கார்கள் ஒழுங்காய் நடைபெறவில்லையென்பதை எத்தனையோ முறை குறை கூறியுள்ளோம். இப்போது பழய குத்தகைதாரின் கீழ் உட் குத்தகையாக வேறு மோட்டார்கள் சென்ற நாலைந்து நாட்களாக ஒழுங்காகக்காலந் தவறாமல் தபால்களைத் தாங்கிப் போக்குவரத்து செய்துவருகின்றன.

## கொப்பனாபட்டி.

ஸ்ரீ கம்ப ராமாயண வசனம் புரட்டாசி மீ" ௩ உ முதல் தண்ணீர்ப் பந்தல் கட்டிடத்தில் ஆரம்பிக்கப் பெற்று உகூஉ இவ்வூர் நம்மரபினராகிய சிவநேசச் செல்வர்களின் பொருளுதவியால் பல விநியோகாதிகள் நைவைத்தியம் செய்யப் பெற்று இரவு கூ மணிக்கு ஸ்ரீ ராமபிரானுக்கு மகுடாபிஷேகம் சிறப்பாக நடத்தப் பெற்றது. குழுமியிருந்த சுமார் உ௦௦ பேருக்குத் தன வைசிய வாலிபச்சகோதரர்களால் விநியோகாதிகள் வழங்கப் பெற்றனகது. ஸ்ரீமாங் ராம சுப முத்தையா செட்டியாரவர்களாலும், ஸ்ரீமத் மு. மு. முத்துக்கருப்ப தேசிகரவர்களாலும் இசையோடு நடை வாசித்த சிங்காரம் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் மனதை காந்தம்போல் கவரும்படி செய்து விட்டது. இப்படியே நன்றாய் வாசிப்பவர்களைக் கொண்டு வாசிக்கச் செய்தால் மெத்த நலமாயிருக்குமென் ஒரு நிருபர் தெரிவிக்கின்றார்.

## திருப்பராய்த் துறை

(திருச்சி ஜில்லா)

இத்தலத்துக்கு நாளிது ஐப்பசி மாதம் முதல் தேதி துலாக் காவேரி ஸ்நானத்துக்கு நமது சமூகத்து சகோதர சகோதரிகள் சுமார் ஆயிரம் பேர்வரை வந்திருந்தார்கள். அவர்களில் பெண் மக்கள் மிக அதிக மென்று சொல்ல வேண்டுவதில்லை. அன்று காலை ஐந்து மணிக்குத் திருப்பராயத் துறையில் எழுந்தருளி யிருக்கும் சிவ பெருமான் பஞ்ச மூர்த்திகளுடன் புறப்பட்டு ஸ்நானகட்டத்தில் தீர்த்தம் அளித்துத் திரு வீதி வலம் வந்து காட்சி கொடுத்தருளினார். அன்றிரவு பஞ்ச மூர்த்திகளோடு புறப்பட்டுத் திரு வீதியில் வாணக்காட்சிகளுடன் உலாப் போந்தார், டி கோவிலும் காணுகோத்தான் வெ. வீர. கும்பத்தாரவர்களால் திருப்பணி முதலானதும் இரண்டு பெரிய வெள்ளி ரிஷப வாகனங்களும் நமது சமூகத்தாரவர்கள் வந்தால் தங்குவதற்குக் கட்டிடம் முதலானதுகளும் மிக அழகாய் அமைக்கப் பெற்றிருக்கின்றன. திருச்சியினின்றும் செல்லுகின்ற சாலை சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளச் சேதத்தினால் சீர்கேடாக இருப்பதால் எல்லாக் கார்களையும் திருச்சியில் நிறுத்தி விட்டு ரயில் மார்க்கமாக வந்து சேர்ந்தார்கள். காவேரியிலும் அதிகமாகத் தண்ணீர் வரவில்லை. திருப்பராயத் துறைக்கும் வாத்தலைக்கும் (முக்கம்பு) செல்லும் வழியின் உள்ளே காவேரி ஆற்றில் பரிசல் மார்க்கமாக செல்ல வேண்டியதாயிற்று. அதில் ஜனங்கள் மிகக் கஷ்டமடைந்தார்கள். என்ன கஷ்டப் பட்டாலும் தீர்த்த யாத்திரையும் சுவாமி தெரிசனமும் செய்வது நமது சமூகப் பெண் மக்களின் கொள்கையென்பது எழுத வேண்டுவதன்று. ஸ்ரீரங்கத்திலும், திருவானைக்காவிலும் நமது சமூகத்தார் தங்கியிருக்கின்றார்கள். ஸ்ரீரங்கத்தில் வடக்குச் சித்திரை வீதியில உள்ள நகர விடுதிக் கட்டிடமானது மிக பழமையாகவும் அபாயமாகவும் இருக்கின்றது. ஆனதால் அரியக்குடியார் சத்திரத்திலும் மற்ற இடங்களிலும் இருக்கின்றார்கள். கவனிக்க வேண்டிய நகர விடுதியில் ஸ்ரீரங்கம் ஒன்று என்பதும் நமது யாத்திரை செய்கின்ற பெண்மக்கட்கு நகர விடுதி தாய்வீடு போன்றதென்பதும் நேயர்களுக்கு ஞாபகப்படுத்த வேண்டியதில்லை என்று ஸ்ரீமாங் ஆவி னெ. அருணாசலன் எழுதுகிறார்.

## இரங்கூன்

புரட்டாசித் திங்கள் இருபத்தாறும் நாள் இரங்கூனை அடுத்து கூ மைல் தூரத்தில் இருக்கும். கம்பையில் சி. கரு. சி. அறை நகரத்தார்களால் புரட்டாசித் திங்கள் கடைசிச் சனிக்கிழமையை முன்னிட்டு நடாத்தப் பெற்ற விருந்தன்று தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்து அங்கத்தினர்களையும் வரவழைத்து அங்கு உபந்நியாசங்கள், சங்கீதக் கச்சேரி, பஜனை முதலியான நடாத்தும்படி கேட்டுக் கொண்டார்கள். அதற்கிணங்க நம் சங்கத்து அங்கத்தினர்களில் இருபது பேருக்கு மேல் சென்று உஇ மணி முதல் கூ மணி வரை "ஜீவகாருண்ய நீதி மன்றம்" நடாத்தியதின் பயனாகச் சிலர் சுத்த போஜனிகளாக மாறியிருக்கின்றார்கள். இரவு கூ மணிக்கு மேல் கிரமப்படி அங்கத்தினர்களும், மற்றுமுள்ள சிவ பக்தர்களும் அநுஷ்டானங்கள் செய்த பிறகு சிவ சின்னங்களணிந்து நகரப் பிரவேசமாகப் பெருமாள் கோவில், சுப்பிரமணியர் கோவில்களுக்குச் சென்று இரவு அஇ மணிக்கு நகரத்தார் மடம் வந்து சேர்ந்தார்கள். பிறகு மணி கூக்கு மேல் மீனலா உ. அ, உ, க, ராம. சாமிநாத செட்டியாரவர்கள் ஹார்மோனியம் வாசிக்க, சிவசுப்பிரமணியஞ் செட்டியாரவர்களாலும் சாமிநாதஞ் செட்டியாரவர்களாலும் வாய்ப்பாட்டுப் பாடப் பெற்று இரவு கஉ மணிக்கு மங்கள கீதத்துடன் நிறைவெய்தியது. மறு தினம் உஎஉ காலை அ மணிமுதல் திருவாளர் வெ. கண. வெ. சொக்கலிங்க ஐயா அவர்கள் கந்தபுராணத்தில் அவைபுகு படலமாகிய 'வீரவாகு தேவர் தூது சென்ற படல'த்தைப் பல மேற்கோள்களுடன் கற்றோரும் மற்றோரும் எளிதில் உணருமாறு மிக உருக்கத்துடன் கஉ மணிவரை வியாக்கியானம் செய்தார்கள். பிறகு மாலை கூ மணிக்கு முந்திய தினத்தைப்போலவே விஷ்ணு வாலயம், சுப்பிரமணியர் ஆலயம், பெரிய நாயகியம்மன் கோவில் முதலியவற்றிற்குச் சென்று வந்தார்கள். பிறகு கூ மணிக்கு மீட்டும் சங்கீதக் கச்சேரி ஆரம்பித்து கஉ மணிக்கு மங்களகரமாக நிறைவெய்தியது.

சா. கணேசன்.

## பொதுச் செய்தி.

திருவாடானை தாலுகா முதலாவது தேசிய மகாநாடு தேவகோட்டையில் உஎ, உஅ-ந் தேதிகளில் சென்னை ஸ்ரீமான் எஸ். சீனிவாசய்யங்கார் அவர்களின் அக்கிராசனத்தின் கீழ் நடைபெறும்.

* *

சென்னைச் சட்ட சபையில் கனம் இராமநாதபுரம் இராஜா அவர்கள் கேட்டகேள்விகளுக்கு அரசாங்கத்தார் அளித்த பதிலிலிருந்து சிவகங்கை ஜமீன்தாரிக்கு இம்பீரியல் பாங்கியில் சென்ற ஜூன் மாதமுடிவில் ரூ. உகஎ000 கடனிருந்ததாகவும் அதன் பிறகு ஆகஸ்டு கூ-ம் தேதியில் ஒரு லட்சம் ரூ. ஆறுமாதகெடுவில் திருப்பிக்கொடுக்கும்படி மீட்டும் கடன் வாங்கப்பட்டிருப்பதாகவும் இவையாவும் அன்வு வேலைக்காக வாங்கப்பட்டன வென்றும் சமஸ்தான மராமத்து வேலைகளுக்காகச் சென்னை அரசாங்கத்தார் சென்ற மார்ச்சுமாதம் உ௦-யில் மூன்று லட்சம் ரூபா கடன் கொடுத்திருப்பதாகவும் தெரிகிறது.

* *

லண்டனில் ஒர்க்கர்ஸ் வீக்லி என்னும் சமத்துவகட்சிப் பத்திரிகை இராணுவத்தாருக்குத் தூர்ப்போதனை செய்ததாக அப்பத்திராசிரியர் மீது வழக்குத்தொடரப்பட்டு அவ்வழக்கு நடைபெறுமலே வாபீஸ் வாங்கப்பட்டது. இதன்மேல் குறுகிய (கன்ஸர்வேடிவ்) கட்சியாரும் தாராள(லிபரல்) கட்சியாரும் தொழிற்கட்சி அரசாங்கத்தைக் கண்டித்து தீர்மானங்கள் கொண்டுவந்தனர். அத் தீர்மானம் நிறைவேறித் தொழிற்கட்சி அரசாங்கம் தோல்வியுற்றது. உடனே பார்லிமெண்டைக் கலைத்துவிடும்படி முதன் மந்திரி அரச பிரானுக்குக்கூற அவ்வாறே பார்லிமெண்டு கலைக்கப்பட்டது. இனித் தேர்தல் வருகிற புதன்கிழமை நடக்கும். தொழிற்கட்சி அதிகாரப் பதவியிலிருந்தது ஒன்பது மாதங்களேயாம்.



## சமயப் பகுதி

### மெய் கண்ட தேவர்.

அச்சுத களப்பாளர் என்பார் திருப்பெண்ணாகட மென்னும் கடந்தைமா நகரத்தில் தண்ணளி மிக்க கற்பிற் சிறந்த பெண்ணரசியாருடன் இல்லறத்தை இன்புற நடாத்தி வருகையில் பலவளங்களும் மல்கின. ஆனால் மனை யறத்தின் இன்பம் பயக்கும் மகப் பேறு பெற்றிலர். அதின் பொருட்டுத் தங்கள் குல குருவாகிய சகலாகம பண்டிதரிடம் சென்று அறிவுறு மதலையை அடையும் நல் வழி வேண்டி நின்றார். பண்டிதர் மாணாக்கரின் வேண்டுதலை நிறைவேற்றற் பொருட்டுத் தேவாரத் திருமுறையை அறுகாற் பீடத்து அமைத்து நறுமலர் கொண்டருச்சித்து வணங்கிக் கயிறு சாத்திப் பார்த்தார். அதில்,

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளை [யினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுற [வேண்டா வென்றும்
வேயனதோளுமை பங்கன் வெண் [காட்டு முக்குள நீர்
தோய் வினையாரவர்தம்மைத் [தோயா வாந்தீவினையே"

என்று திருஞான சம்பந்தர் மலர்வாய்ப் பிறந்த தேவாரத் திருப்பாசுரங் கண்டார். களிப்பெருவகை யுடன் மாணாக்கரை நோக்கிக் கூறுகின்றார்: "அன்புடைய மாணவ! சந்தர்ப்பத்திற் கேற்ப தமிழ் மறையில் பெறற்கரும் செய்யுள்பெற்றனம். அதின்படி திருவெண்காடு சென்றால் சிவம் பெருக்கும் பிள்ளையைப்பெறுவை" என்றருளி விடை கொடுத்தனர். குருமொழி தலைமேற்கொண்ட அச்சுத களப்பாளர் மனைவியாருடன் திருவெண்காடு சென்றார். ஓராண்டு முக்குளம் படிந்து முப்பொழுது முமாபதியை வணங்கிப் புத்திரப் பேறு வேண்டி நின்றார். ஓராண்டு முடிந்தும் உறுபயன் காணாராய் வருத்தத்துடன் நித்திரை செய்வாராயினார். நித்திரையில் நம் வள்ளி மணாளர்க்குத் தாதையார் கனவில் தோன்றி "உனது பக்திக்கு மெச்சினோம்; ஆனால் இம்மையிற் பாலனைப் பெறும் விதி நினக்கிலை" என்றருளினார். அது கேட்ட களப்பாளர் "அண்ணலே! எனையாண்டு கொண்டருளிய வமுதே" எனத் துதித்துக் கூறுகின்றார்: "குருமொழி தலைமேற் கொண்டோம்; தேவாரம் உண்மை யெனக் கண்டோம்; உம்மைச் சரணாக வந்தடைந்தோம்; இஃதெல்லாம் உண்மை யெனில் இம்மையிற் பாலனைப் பெறும் நல்வர மருளுக" என்று வேண்டி நின்றார். இது கேட்ட அம்மையப்பர் "எமது பிள்ளையாரருளிய தேவாரத்தி லுள்ள உனது நம்பிக்கைக்கும் குரு பக்திக்குமாகச் சீரபுரத்துச் சிறுவனைப் போலச் சீருறும் செல்வனை இம்மையிற் பெறுவை" என்று அருளி மறைந்தனர். பிறகு சிவனருளால் தீதகன்றுலக முய்ய சிவ நெறியே செந்நெறியெனத் தேயமெலாம் போற்ற சிவஞானபோத மறை செந்தமிழில் சீருற்றோங்க மந்த பரிபாகரும் நல லத்துவித மெய்யுணர்ந்து மகிழ்ச்சி யெய்த இற்றைக்குச் சுமார் எ௦௦ ஆண்டுகட்கு முன் கருவிலே திருவுடையராய் திருவெண் காட்டில் நமது மெய் கண்ட தேவர் திருவவதரித்து அருளினார்.

நற் புத்திரப் பேறு பெற்ற களப்பாளர் உள மகிழ் வெய்தி உமையொருபாகற்கு அபிடேகாதிகள் செய்தும் சிறுவர்கட்கும் ஏனையோர்க்கும் சிற்றுண்டி வழங்கியும் புத்திரோற்சவம் கொண்டாடினார். பிறகு வெண் காட்டில் சில நாளிருந்து விமலனருள் பெற்ற பிள்ளையாருடன் தங்கள் கடந்தைமா நகரத்திற்குச் சென்றார்கள். அங்குள்ளாரனைவரும் இந்திரற்கும் சந்திரற்கு மெழில் மிக்க சுண்ணை நகர் வந்துதித்த சம்பந்தர் சோதரரைத், தயங்கு மணித்தவிசினிலும் தூய சுடர்த் தொட்டிலிலும், தூங்கமலச் சயனத்தும் வைத்துத் தாலாட்டிப் பாராட்டி மகிழ்வுற்றார்கள். நமது மெய்கண்ட தேவருக்குத் திருவெண்காட ரெனும் பிள்ளைத் திருநாமம் முதலாய சடங்கெலாம் செய்து முடித்தார்கள். முடிந்ததும் தீதிலாத் திருத்தொண்டத் தொகை தரப்போந்தாரைத் தடுத்தாட் கொண்ட திருவெண்ணை நல்லூருக்குத் தாய்மாமனார் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு நமது திருவெண்காடர் சாமுசித்திக நிலையடைந்து முந்தையறிவின் முதிர்ச்சியினால் சிவத்தியானம் உடையவராய் விளையாடிக் கொண்டிருந்தார். அப்பொழுது இரண்டாமாண்டு நிறைவெய்தியது. இது போழ்து வடகயிலையினின்றும் தென் பொதிகை வந்த திருநந்திதேவரின் மாணவரின் மாணவராம் வாலறிவுடைய பாஞ்சோதி முனிவர் திருவருள் கூட்டத் திருவெண்காட்டுக் குழந்தையைக் கண்டின்புற்றார். இவ்வருட் பெருங் குழந்தையே பொருட் பெரும் சைவத்தை உலகிற்கு உணர்த்தும் ஒரு பெருங் குழந்தையென்பதை உணர்ந்தார். சிவ தீக்ஷை செய்து சிவஞானபோதோபதேசமும் செய்தருளினார். சிவஞானபோதப் புத்தகத்தையும் திருக்காத்துக் கொடுத்தார். பொழிப்புரையும் புகட்டினார். இதனைச் செந்தமிழில் சிறப்புறச் செய்வாயாக வென்றருளி மெய்கண்ட தேவரெனும் தீக்ஷாநாமமுமிட்டழைத்து தென்றல் நின்றுலவு தென்பொதிகை அடைந்தார். பிறகு நமது மெய்கண்ட தேவர் சிவஞானபோதத்தை அங்கு கோயில்கொண் டெழுந்தருளும் பொல்லாப் பிள்ளையாரிடத்துச் சிந்தித்துத் தெளிந்து கொண்டார். கொண்ட பின் குருமொழிப்படி சிவஞான போதத்தைச் செந்தமிழில் கஉ சூத்திரங்களாகச் சுருங்கச் சொல்லி வார்த்திகப் பொழிப்புரையும் வனப்புற எழுதிச் சுத்தாத்வைத சைவ சித்தாந்தமே முடிந்த முடிபென்பதை அங்கை நெல்லி போல் நன்கு விளக்கினார். இச் சிவஞானபோதமே சைவப் பெருமக்கள் சிரமேற்கொள்ளும் சித்தாந்த சாஸ்திரம் பதிநான்கனுள்ளும் முதன்மையானது. இதன் வழி நூல் சிவஞான சித்தியார். சார்புநூல் சிவப்பிரகாசம். இச் சிவஞான போதத்திற்கு மாதவச் சிவஞான யோகிகள் நய மிக்க சிற்றுரையு மெழுதி யுள்ளார்கள். இப் பெருநூலை நமது மெய்கண்டதேவர் தன்னை வந்தடைந்த நன்மாணாக்கர்கட்குபதேசித்தருளினார், இப்படி நம் தமிழ் நாடெலாம் சிவஞானபோதமணம் கமழ்ந்தது. இஃதெல்லாமறிந்த சகலாகமபண்டிதர் நம் வாக்கின்படி பிறந்த மெய்கண்ட தேவன் நம்மை வந்து கண்டானில்லையே நாம் தானே இவ்வளவிற்கும் காரணம் என்ற ஆணவம் கொண்டாராய் நாமாவது சென்று விஷயங்களைத் தெரிந்து வருவோமென்று வெண்ணை நல்லூர் வந்து மெய்கண்ட தேவர் திருமடத்திற்கும் சென்றார். அது சமயம் நமது புனித மெய்கண்டார் திருவதிகை மனவாசகங்கடந்தார், பொய்யகல் சிற்றம்பலநாடிகள் முதலாம் புகழ்மிக்க மாணவர் நாற்பத்தொன்மர்க்கும் சிவஞான போதபாடம் செப்பி அருளினார். அவ்விடத்திற்குச் சகலாகம பண்டிதர் தனித்துச் சென்று உலாவினார். அப்பொழுதும் ஆணவமுடையராய் நின்றபடியால் நமது மெய்கண்டதேவர் தங்கள் குல குருவை வரவேற்றாரில்லை. வரவேற்க வில்லை என்ற கோபத்துடன் பண்டிதர் நிற்க மாணவர்கள் மெய்கண்ட தேவரை "ஆணவமென்றால் என்ன விளக்கியருளுக" வென்றுகேட்டார்கள். உடனே பண்டிதர், மெய்கண்டாரை நோக்கி "நீர் எமக்குத்தான் ஆணவலக்ஷணம் விதந்து கூற" மென்று வினவினார். அது கேட்ட சைவசாத்திரங்கண்ட மெய்கண்டார் புன்முறுவலுற்று "நீர்தான் ஆணவசொரூப" மென்றுகைசுட்டிக் காட்டாமல் காட்டியருளினார். உடனே பண்டிதர் அச்சம் கொண்டார். மெய்கண்டதேவரின் தெய்வீகத்தன்மையைக் கண்டார். "பிழையைப் பொறுத்து என்னையும் மாணவர் குழாத்தன் ஒருவனாகக்கொண்டருள்க" வென்று வணங்கி நின்றார். வணக்கங்கண்ட வள்ளல் நம்மெய்கண்டார் "ஆதிசைவநல்லருணந்தியே" என அழைத்தார். பூதி கொடுத்தார். வண்ணமலர்ச் செங்கனிவாய் மணியதரம் புடைதுடிப்பச் செந்தமிழ்ச் சிவஞானபோதத்தை உபதேசித்தருளினார். பிறகு சகலாகமபண்டிதராம் அருணந்தி சிவத்தையே மாணவர்க்கெலாம் முதல்வராகக் கொண்டார். கடைசியாக அருணந்திசிவம் முதலாய சக மாணவர்க்கும் தத்துவமசி மகாவாக்கியம் செப்பி பதி, பசு, பாசம் மூன்றும் நித்திய மென்பதையும் சைவசமயமே சமய மென்பதையும் நில வுலகிற்கு உணர்த்துவீர்களாக வென்றருளி நிர்மல சிவன் முத்தாரிடம் பேரானந்த மூர்த்தியாய் முடிவில் சித்தசித் தெளிம் நிறைந்திடு சிவபரானார். அத்திருநாள் நாளிது கஉ உ செவ்வாய்க்கிழமை வருகின்றது. அப்பெரு நாளைச் சைவத்திருவாளர்களும் செந்தமிழ்ச் செல்வர்களும், ஏனைய பெருமக்களுடைய புனிதர்களும் போற்றுதல் வே

# மனோரஞ்சிதம்.

குட்டிச்சாத்தன், A. B. C. D. Etc. எழுதியது.

**எல்லாம் வெள்ளி:—** நம்முடைய நாட்டில் பெண்களுக்குக் கல்யாண காலத்தில் சீர் முறை கொடுக்கும்பொழுது, உபயோக மில்லாத பல சாமான்களை வெள்ளியில் செய்து கொடுக்கிறார்கள். அதாவது, வெள்ளிக் கரும்பு, வெள்ளி மாங்கொத்து முதலியன கொடுக்கப்படுகின்றன. இதெல்லாம் வீண் டம்பமல்லவா?

**காந்தி:—**"இந்தக் காந்தி சொல்லுவதைக் கேட்கக் கூடாது; மதத்தைக் கெடுக்கிறார்" என உள்ளூரில் ஒருவருஷ காலமாக ஒரு செவிட்டு ஓந்தி கத்திக் கொண்டே திரிகிறது. இனிமேல் அந்த ஓந்திக்குச் சத்திரங்களிலும் மடங்களிலும் சாப்பாடு போடுவதில்லை என்று ஏற்பாடு செய்து விட்டால் அது ஒடுங்கி அடங்கி வாய் பேசாது.

**படைப்புப் பிரசாதம்,—**ஆடு கோழி அறுத்துப் படைக்கு மிடங்களில் சைவமாக உள்ள பிள்ளைகளைச் சில அசட்டு மக்கள், 'பிரசாதம், ராசி' என்று சொல்லி மாமிசத்தைக் கட்டாயப்படுத்தி ஊட்டுகிறார்களெனக் கேட்டுப் பெரிதும் வருந்துகிறேன். அப்படி ஊட்டுகிற பாவிகளுடைய வழியில் இயமதூதர்கள் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவார்கள் என்பதனை நான் நினைவூட்டுகிறேன்.

**அவசியம் வேண்டியது!—**திருநெல்வேலி ஜில்லாவில் செல்வர்களாகவுள்ள சில சைவ வேளாளர் வீடுகளில் திருமண காலத்தில் விளையாட்டு, பாட்டு முதலியன நடைபெறும் பொழுது மாப்பிள்ளையும் பெண்ணும் சீட்டுப் போடுகிறார்கள். இந்த நாகரிகமுள்ள திருத்தத்தை ஆதரிக்க வேண்டியது மிக அவசிய மல்லவா? காசுவைத்துப் போட்டால் நன்றாக இருக்கும்! ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் நகைகளைக் கழற்றி வைத்துப் போட்டால் இன்னும் அழகாக இருக்கும்!! தோற்றவர் வென்றவர்களுடைய சொல்லைக் கேட்கிறது என்று முடிவு செய்துகொண்டால் மெத்த அழகாக இருக்கும். பின்னர் சண்டை வந்து மண்டையை உடைத்துக்கொள்ள மாட்டார்கள்.

**மற்றொன்று:—**மற்றொரு கல்யாணக்கார வீட்டில் சீர் முறையில் சொக்கட்டான்காய்ச் சேலையும் காய்களும் தந்தக்கவறும் வைத்திருந்தார்கள். மாப்பிள்ளை நல்ல பிள்ளை யாவதற்கு இவை மிக அவசியந்தான்! கல்யாணஞ் செய்கிறபொழுதே கவறு வாங்கி உருட்டக்கொடுத்தால், ஏன் பின்னர் மாப்பிள்ளையவர்கள் வீடு வாயில்களை எழுதிக் கொடுத்து வாங்கிக் கொண்டு விலைசெய்யமாட்டார்கள்? வெட்கம்!

**என்ன விளையாட்டு?:—**சில நாகரிக துரைகள் சிறு பறவைகளையும் அழகிய குருவிகளையும், மான் முயல் முதலிய வற்றையும் சுடுவது தங்களுக்கு ஒரு பெரிய விளையாட்டாக இருக்கிறதென்று சொல்லுகிறார்கள். சதா துப்பாக்கியுங் கையுமாக அலைந்துதிரிகிறார்கள். சுற்றிச் சுற்றிக் காடுகளையெல்லாம் கலைத்துச் சிற்றுயிர்களைச் சுட்டு மகிழுகிறார்கள்! பாவம்! பாவம்!! ஒருஎளிய பிராணியைஒருபெரியமனிதன் விளையாட்டுக்காகச் சுட்டு வீழ்த்தலாமா? என்ன நியாயம்! சுட்டு விளையாடுகிறேன் என்று சொல்லிக் கொல்வோரைக் கடித்து விளையாடுகிறோம் என்று கரடி, புலி, சிங்கம், பாம்பு முதலியன வந்து சூழ்ந்து கொண்டு துன்புறுத்தினால் சும்மா இருப்பார்களா? "தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொல், மன்னுயிர்க் கின்னா செயல்."

**தக்க முறை எது?:—**பேயாம்பட்டியில் ஒரு விதவை ஆச்சிக்கு ஒருமகன் இருந்தான். மகனுக்குக் கல்யாணம் நடந்தது. சில மாதங்களில் மகன்பரிதாபமாகப் போய்விட்டான். ஒருவிதவைக்கு இரண்டு விதவையாய் விட்டது. பாவம்! இப்பொழுது இரண்டு பிள்ளைகள் கூட்டிக் கல்யாணம் செய்துவைக்க விரும்புகிறார்கள். இது எனக்குக் கொஞ்சமும் பிடிக்க வில்லை! என்னுடைய அபிப்பிராயம் வேறு. முதலாவது பெரிய விதவைக்கு ஒரு பிள்ளை கூட்டவேண்டியது. இரண்டாவது பால்ய விதவையைக், கூட்டிய பையனுக்குக் கல்யாணஞ் செய்ய வேண்டியது. பெரியவளுக்குப் பிள்ளைக்குப் பிள்ளை வந்து விட்டது. சிறியவளுக்குத் தான்வாழ்க்கைப்பட்ட இடத்திலேயே நாயகன் முறையில் ஒருவன் அமைகின்றான். இது தான் தக்க முறைகள். இதை விட்டு விட்டு இரண்டு பிள்ளை கூட்டிக் கஷ்டப்படக்கூடாது.

**சங்கற்பம் செய்துவைப்பவர்:—**மதுரைப் பொற்றாமரைத் தடாகக்கரையில் ஒரு ஐயர் உடம்பில் வேஷ்டியைப் போர்த்துக் கொண்டு, வாயில் நிறைய வெற்றிலை பாக்குப் புகையிலை அதக்கிக்கொண்டு, கையிலே தருப்பைப் புற்கட்டை வைத்துக் கொண்டிருந்தார், நானும் மற்றொரு சிவநேசரும் அங்குபோய்ச் சேர்ந்தோம். ஐயர் அழகைப் பார்த்தவுடனே எனக்குச் சங்கற்பஞ் செய்துகொள்ளப் பிடிக்கவில்லை. ஆகையால் நான் பொய்கையிலிறங்கிக் குளித்துக் கொண்டிருந்தேன். என்னுடைய நண்பர், ஐயரைப்பார்த்துச் சுத்தஞ் செய்து கொண்டுவந்து சங்கற்பஞ் செய்து வையுங்கள் என்று சொன்னார். ஐயர் நண்பரைப்பார்த்து, "நான் சுத்தமாகத்தானே இருக்கிறேன்; விபூதிப்பட்டை போட்டிருக்கிறேன், பாருங்கள்" என்று காட்டினார். நண்பர், "இல்லை! நீங்கள் வாயிலதக்கிக்கொண்டிருக்கிறதை வெளியே போய்த்துப்பிவிட்டுச் சுத்தஞ்செய்து கொண்டுவந்து செய்து வையுங்கள்" என்று விளம்பினார். ஐயர், "நான் இப்பொழுது தான் காப்பி சாப்பிட்டேன். வெற்றிலை பாக்குப் புகையிலை விலை அணா அரை. ஆகவே, உமிழ முடியாது. மத்தியானம் ஸ்நானம் செய்யும் பொழுது தான் சுத்தி செய்து கொள்ளுவேன்" என்று சொன்னார். நண்பர் மற்றொருவரைப் பார்த்தார். அவர் பல் விளக்காது உஷக்காலத் தாம்பூலத்துடன் வீற்றிருந்தார். பிறகு இரண்டணாவிற்கு நாலணாத் தருகிறேன். வெற்றிலை பாக்கு வாங்கிப் போட்டுக் கொள்ளும் என்று சொல்லி முதல் ஐயரை சுத்தஞ் செய்துகொண்டுவரவிடுத்துச் சங்கற்பஞ்செய்து கொண்டார். இந்த வேடிக்கையை நான் பெருநகைப்புடன் கவனித்துக்கொண்டிருந்தேன். சங்கற்பம் செய்து வைக்கிறவர்கள் செய்து கொள்ள வருவோரை மிக அலக்ஷியமாக நினைத்து ஏமாற்றிக் காசுபறிக்கவே நினைக்கிறார்கள். வைதிக விஷயமாகவே கருதுகிறார்களில்லை. காப்பிக் கிளப்புக் காரியத்தைப் போல் நினைத்துப் பல்விளக்காமலும் குளிக்காமலும் புகையிலையை அதக்கிக் கொண்டும் (சுருட்டும் பிடித்துக்கொண்டால் இன்னும் அழகாக இருக்கும்) குளிக்க வருவோர்க்கு ஸ்நான சுத்தி செய்து வைக்கிறார்கள். இத் திருவிளையாடல் எல்லா இடங்களிலும் நடை பெறுகின்றது. நம்மை அவர்கள் எப்படி மந்திர ஞானமிலாதவர்களென நினைத்து அலக்ஷியஞ் செய்கிறார்களோ, அப்படியே நாமும் அவர்களைத் தந்திர ஞானமிலாதவர்களெனக்காட்டி விடுதல் வேண்டும். முதலில் பக்தி சிரத்தையாகச் சங்கற்பஞ் செய்து கொண்டு, ஸ்நானஞ் செய்து விட்டுக் கரைக்குவந்து, பூவரச இலையில் உருண்டைக் கற்களையும், ஓட்டாஞ்சல்லிகளையும், அவர் தந்த தருப்பையையும் வைத்து விநயமாகக் கொடுத்தல் வேண்டும். அப்பொழுது தான் திருத்தமடைவார்கள்.

## இலங்கைச் சீர் திருத்தம்.

இலங்கைச் சீர்திருத்திய சட்டசபைக்கு அங்கத்தினர் தெரிந்தெடுக்கப்பட்டுவிட்டனர். இந்தியருக்குப் பிரதிநிதியாக கனம் ஜ. எக்ஸ் பெரேராவும் ஒரு மகம்மதிய கனவானும் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். இதற்கு முந்திய சட்ட சபையில் ஒரே ஸ்தானம் பெற்றிருந்த வட (யாழ்ப்பாணம்) மாகாணத்துக்கு இப்போது ஐவர் பிரதிநிதிகளாக வருகின்றனர்.

(முன் பக்கத் தொடர்ச்சி.)

...ண்டும். அவர் மலர்வாய்ப் பிறந்த செந்தமிழ்ச் சிவஞானபோதத்தை அன்றலர்ந்த மலர்கொண்டருச்சித்து வணங்கிச் சிந்தித்துத் தெளிதல் வேண்டும். அவர் பெயரால் பத்திரிகைகளும் சங்கங்களும் ஸ்தாபித்தல் வேண்டும். அன்று தினம் ஏழைகட்கு இன்னமுதருத்தி இன்னும் பல நல்லறங்களும் செய்தல்வேண்டும். இம்முறையே யாண்டும் மெய்கண்டார் புகழ்பரப்பி அவர் பொன்னடிமலர்களைப் பூக்கொண்டு போற்றுதல் வேண்டும்.

"பண்டை மறைவண்டரற்றப் பசுந்
தேன் ஞானம் பரிந்தொழுகச் சிவகந்
தம் பரந்து நாறக், கண்ட விருதய
கமலமுகைக ளெல்லாங் கண்டிறப்பக்
காசினிமேல் வந்தவருட் கதிரோன்,
விண்டமலர் பொழில் புடைசூழ் வெ
ண்ணெய் மேவு மெய்கண்ட தேவன்
மிகு சைவநாதன், புண்டரிகமலர்தாழச்
சிரத்தே வாழும் பொற்பாத மெப்போ
தும் போற்றல் செய்வாம்."

சேவு, மெ. மெய்யப்பன்,



கண்டனூர் நா. பெ. ரும. வெ. அரு. சுப்பிரமணியன் செட்டியார் மகன் மைனர் சிதம்பரம்.

ஷை மைனருக்கு கார்டியனும் தாயுமான உமையாளாச்சி தெரிவித்துக் கொள்ளுகிற தென்ன வென்றால்.—

எனது மகன் சிதம்பரத்தை சிலர்கள் கைவசப்படுத்திக்கொண்டு கெட்ட வழிகளில் அவனைத் திரும்பும்படி செய்து ஷை யானிடமிருந்து யாதொரு பிரதிப் பிரயோசன மில்லாமலும் ஷையானை ஏமாத்தியும் புரோநோட்டு வகையறா தஸ்தவேசுகள் எழுதி வாங்குவதாகவும் தெரியவருகிறது. என் மகன் ஷை சிதம்பரம் மைனராகயிருக்கிறான். குடும்பகாரியங்கள் கவனிக்கக்கூடிய சக்தியற்றவன். ஷை யான் ஷை காரியங்களை கவனிக்க வேண்டிய அவசியமுமில்லை. இந்த நிலைமையில் ஷை யானிடமிருந்து எழுதி வாங்கப்பட்டிருக்கும் தஸ்தவேசுகள் செல்லக்கூடிய தில்லையென்றும் கட்டுப்படுத்தத்தக்கதில்லையென்றும் இதன் மூலம் தெரிவிப்பதுடன் இனிமேலும் ஒருவரும் ஷையானுக்கு யாதொரு தொகையும் கொடுக்கக்கூடாதென்றும் அவனிடமிருந்து ஏதேனும் தஸ்தவேசு வகையறா எழுதி வாங்கக் கூடாதென்றும் இதை மீறி வாங்கும் பக்ஷத்தில் ஷை தஸ்தவேசுகள் ஷை மைனரையாவது குடும்பச் சொத்துக்களையாவது கட்டுப் படுத்தாது என்றும் இதன் மூலம் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்.

——இந்த கீரல் உமையாளாச்சி
சாக்ஷி நா. பெ. ரும. வெ. அரு. சுப்பிரமணியஞ் செட்டி.

இரண்டாவதாண்டு.
'லக்ஷ்மி' பத்திரிகையின் இரண்டாவது வருஷம் ஆவணி மாதம் ஆரம்பமாகின்றது.
தமிழுலகத்திலே
சித்திர சகிதம் வெளிவரும்.
நயமான மாத ஸஞ்சிகை.
எங்கள் லக்ஷ்மி ஒன்றே இலக்கியம், சாஸ்திரம், விவசாயம், வர்த்தகம், கைத்தொழில் முதலியவற்றைப்பற்றிய வியாசங்களும் நூதனப் பாடல்களும் சிறு கதைகளும் லக்ஷ்மியில் மாதந்தோறும் வெளி வருகின்றன. மாதிரிப் பிரதி இனாம்.
வருஷ சந்தா:
இந்தியா ரூ. 2—0—0.
வெளிநாடு ரூ. 2—8—0.
மானேஜர்:—'லக்ஷ்மி,'
தபாற் பெட்டி நெ. 99,
சென்னை.

முருகன்! வேலன்!
போட்டோ நெ. 1 ஸடாம்பு.
கலியுகப் பிரத்யக்ஷ தெய்வமான முருகமூர்த்தியின் போட்டோ படம்கண்ணைக்கவரும்அழகுபொருந்தியது. பலவித வர்ணங்களுடன் கூடியது. மனதைக்கவரும் மனோரம்ய உருவம். பெரிய சயிஸ் ரூ. 1, சிறிய சயிஸ் அணா 8. ஷை போட்டோ தபால் ஸ்டாம்பு அளவில் அழகிய நூதன பார்டருடன் கூடியது. 100 ரூ. 3, 50 ரூ. 1-12-0, 25 ரூ. 1.
குறிப்பு:-இப்பத்திரிகையின் பெயரைக் குறித்து ஆர்டர் அனுப்புகிறவர்களுக்குமட்டும் தபால் செலவு இனாம்.
ஸர்மா சகோதரர்,
வேப்பேரி, சென்னை.

பிரசங்க ரத்தின தீபம்.
—o—
இஃது, ஆன்ம விருத்திக்குரிய செய்யுளும் உரையும் சேர்ந்த ஒரு நூல். நவசக்தி, செந்தமிழ் முதலிய பத்திரிகைகளாலும், மஹாமஹோபாத்தியாயர் வே. சாமிநாதையரவர்கள், வித்துவான் மு. கதிரேசச்செட்டியாரவர்கள் முதலிய பேரறிஞர்களாலும் பாராட்டப்பெற்ற இப்புஸ்தகம் பிரதி ௧-க்கு அணா எட்டு.
கிடைக்குமிடங்கள்:—பி. நா. சிதம்பரநாத முதலியார்,
புஸ்தக ஷாப், புதுமண்டபம், மதுரை.
பண்டிதர் வ. மு. இரத்திநேசுவரையர்,
கீழைச்சிவப்பட்டி.

மகாத்மா காந்தி போட்டோ ரப்பர் ஸ்டாம்பு இனாம்!
ஸ்வாமி ரப்பர் ஸ்டாம்புகள் செட் நெ. 3. விலை ரூ. 1.
தங்களுக்கு இஷ்டமான மேலே கண்டிருக்கும் மூர்த்திகளின் வடிவங்களைக் கடிதங்கள், கார்டுகள், கவர்கள், புஸ்தகங்கள் முதலிய எல்லாவற்றிலும் தனித்தனியாகத் தாமே அச்சிட்டுக் கொள்ளலாம். மேற்கண்ட 6-ஸ்வாமி ரப்பர் ஸ்டாம்புகளின் விலை ரூபா 1. இத்துடன் மைபேட், பிரஷ், மை புட்டி இனாமாக அனுப்பப்படும். வி. பி. தபால்சார்ஜ் வேறு, ஏககாலத்தில் 3 செட்டுகளாக வாங்கினால் மகாத்மா காந்தி போட்டோ ரப்பர் ஸ்டாம்பு 1 இனாமாக அனுப்பப்படும்.
விலாசம்:-எ. ராஜு பிள்ளை அண்டு பிரதர், நெ. 19, பஜார் ரோட், சூளை, மதராஸ்.

குமரன் கலர் படம்.
குமரன் இருக்கிற வீட்டிற்கு எல்லா நன்மையும் தானே வந்து சேரும். உங்கள் வீட்டில் அழகான குமரன் திருவுருவப் படமிருக்கிறதா? இல்லையானால்உடனே எழுதுங்கள்! மூன்று வர்ணங்களில் அச்சிடப்பட்ட அழகான திருமுருகன் திவ்ய திருவுருவப் படம் அனுப்புகிறோம். படமொன்றுக்கு விலை அணா இரண்டு. ௧00 படத்தின் விலை ௧0—0—0 தபாற்கூலி வேறு.
'மானேஜர்' குமரன் காரைக்குடி.

# தீபாவளி! தீபாவளி!!

## தீபாவளி நெருங்கி வருகிறது!

## எங்கும் கதராடையைப் பரப்புங்கள்!

———:o:———

கதராடை யுடுப்போர் எங்கள் ஸ்டோரில் வியாபாரஞ் செய்து பார்க்க வேண்டுகிறோம். எங்களிடம் எல்லூர், திருப்பூர், நாகர்கோயில், உள்ளூர் முதலிய சரக்குகள் உண்டு. வியாபாரத்திற்கு வெகு சல்லிசாய்க் கொடுக்கிறோம்.

**இந்தியன் ஸ்டோர்ஸ்.**

கல்லுக்கட்டி மேல்கரை,

காரைக்குடி.



## குமரன் வாரப்பதிப்பு.

**சந்தா விபரம்.**

வருஷ சந்தா உள்
நாட்டுக்கு ரூ. ச-0-0
மலாய் நாட்டுக்கு வெள்ளி ந-00
சைகோன் முதலிய
பிற நாடுகட்கு ரூ. ரு-0-0

**விளம்பர விகிதம்.**

மாதம் க-க்கு பத்தி
க-க்கு ரூ. உ0-0-0
ஷை அரைக்கு ரூ. கக-0-0

## குமரன் மாதப்பதிப்பு.

அழகான காகிதத்தில் உயர்ந்த விஷயங்க ளடங்கிய குமரன் மாதப்பதிப்பு புதிய வருஷத்திலிருந்து புதிய அழகோடு பெரிய அளவில் வெளிவருகின்றது.

**சந்தா விபரம்**

உள்நாட்டுக்கு வருஷசந்தா ரூ. ந-0-0
வெளி நாடுகட்கு ரூ. ந-அ-0
மலாய் நாட்டுக்கு வெள்ளி உ-உரு
தனிப்பிரதி ரூ. 0-ச-0
சித்திரைமாத முதலே கணக்கு வைக்கப்படும். மானேஜர்,

குமரன் ஆபீஸ், காரைக்குடி.



## வருகிறது தீபாவளி!

காந்தியடிகளை நினையுங்கள்! கதராடை புனையுங்கள்!!

**விலை சரவசம்.**

எங்களிடம், எங்கள் சொந்த பார்வையின் பேரில் தயார் செய்த ச, சஇ, ரு முழம் சுத்தக்கதரில் சரிகை போட்டசேலம் வேஷ்டிகளும், ரு, சு முழம் கதர் சரிகைத் துப்பட்டாக்களும் துயிலி தினுசுகளும்,

ச முதல் அ முழம் வரை சாதா கதர் வேஷ்டிகளும் பல ரகம் துண்டுகளும், ஷர்ட்டிங் கோட்டிங் துணிகளும் சகாயமான விலைக்குக் கிடைக்கும்.

**கந்தவிலாஸ் கதர் ஷாப்,**

பள்ளத்தூர்.

நவராத்திரி பூஜை! ஸரஸ்வதி பூஜை!!

வைபவங்களுக்காக

நூதனமாய், அதியற்புதமாய், பல வர்ணங்களுடன் கூடிய

## ஸரஸ்வதி தேவி.

போட்டோ படம், பாரத மாதா அவதாரமே யாகையால் பாரத மாதா உருவமாய் அமைக்கப்பட்டுள்ளது. கண்ணைக் கவரும் அழகு பொருந்தியது. இன்றே ஆர்டர் செய்யுங்கள்.

பெரிய ஸைஸ் அணா 12. டஜன் ரூ. 8.
சின்ன ஸைஸ் அணா 6. டஜன் ,, 4.

ஸர்மா சகோதரர், நெ. 3, வேப்பேரி, சென்னை.


சொ. முருகப்ப செட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப்பிரசுரிக்கப்பெற்றது.

